

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 14 கலசம் 163
Volume 14 Issue 163

பிப்ரவரி 2020 ரூ. 25
February 2020 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social criticism

## ஒத்திகைப் பார்ப்பதைத் தவிர நம்மால் வேறு என்ன செய்ய முடியும்?!
லாரல் ஹார்டி

## சாவித்திரி சரித்திரம் முத்துமீனாட்சியான கதை
கால சுப்ரமணியம்

## நான் பிறந்த க-வி-தை
ஷங்கர்ராமசுப்ரமணியன்

## கிடைக்காத நோபல் பரிசு
டோரிஸ் லெஸ்ஸிங்

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



Rs. 140



Rs. 130



Rs. 170



Rs. 110



Rs. 200



Rs. 100



Rs. 80



Rs. 90



Rs. 90

**அம்ருதா**
#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 14 கலசம் 163



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

பிப்ரவரி-2020 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**





**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்


06 **Stan and Ollie**
**ராம் முரளி**

13 இது கனவல்ல அபூர்வமான நிஜம்
**வைதீஸ்வரன்**

14 நான் பிறந்த க-வி-தை
**ஷங்கர்ராமசுப்ரமணியன்**

16 சாவித்திரி சரித்திரம் முத்துமீனாட்சியான கதை
**கால சுப்ரமணியம்**

26 எளிமையும் நெருக்கமும்
**பாவண்ணன்**

37 கவிதை
**டி. கண்ணன்**

38 எதிர்பாராத சந்திப்புகளும் எதிர்பார்த்த சந்திப்புகளும்
**அ.ராமசாமி**

42 சிறுகதை
**கன்பரா யோகன்**

46 சமரசங்களை மறுத்து எழுந்த வியக்தி
**ஸிந்துஜா**

48 கிடைக்காத நோபல் பரிசு
**டோரிஸ் லெஸ்ஸிங்**

59 கோழி கூவும் பருவம்
**நடேசன்**

### ஐந்தாம் தலைமுறை அலைவரிசை

# கவனமுடன் கையாள்வோம்!

### பிரபு திலக்

ஐந்தாம் தலைமுறை அலைக்கற்றை (5ஜி) தொழில்நுட்பம் நம் வீடுகளின் வாசல்வரை வந்துவிட்டது. இங்கிலாந்தில் சில நகரங்களில் கைபேசிகளுக்கான 5ஜி அலைக்கற்றை சேவை பயன்பாட்டுக்கு வந்துள்ளது.சீனாவில் 2018இலேயே 5ஜி சோதனைகள் ஆரம்பிக்கப்பட்டுவிட்டன. அமெரிக்காவில் ஆயத்த வேலைகள் இந்த ஆண்டுதான் தொடங்கப்பட்டுள்ளன. இந்தியாவில் விரைவில் பரிட்சார்ந்த முறையில் தொடங்கப்படும் என்று மத்திய அரசு கூறியுள்ளது. அதாவது இந்த ஆண்டிலேயே அறிமுகமாகலாம். இந்தியாவில் 2020இல் ஆயத்த வேலைகள் தொடங்கி, வணிக ரீதியாக 2022இல் அறிமுகமாகும் என்றும் ஒரு தரப்பினர் கூறியுள்ளனர்.

இந்த தொழில்நுட்பம் உலகத்தை, மனித சமுதாயத்தை, மனித வாழ்க்கையை புரட்டிப் போடபோகிறது என்று இதனை வரவேற்பவர்கள் சொல்கிறார்கள். இந்த தொழிநுட்பத்தில் எந்தக் கருவியையும் இணையதளத்துடன் இணைத்து கையாளமுடியும். கார்,பேருந்து,ஸ்மார்ட்போன்,டிவி, வீட்டு பாதுகாப்பு கருவிகள், டிராஃபிக் விளக்குகள், அறுவைச் சிகிச்சை செய்யும் ரோபோக்கள், தொழிற்சாலைகள், அங்குள்ள இயந்திரங்கள் என எல்லாற்றையும், ஒரு இடத்தில் இருந்து இணையம் மூலம் கையாள முடியும் என்கிறார்கள்.

ஓட்டுநர் இல்லாத கார், பேருந்து என்பது நீண்ட கால கனவாக பேசப்பட்டு வருகிறது. 5ஜி மூலம் அது நனவாகலாம். 5ஜியில் இணையதளம் வேகம் படுவேகமாக இருப்பதாலும், இணைப்பு துண்டிக்கப்படாமல் தொடர்ந்து கிடைக்கும் என்பதாலும் கால விரயம் ஏதுமின்றி பிறப்பிக்கப்படும் கட்டளைகள், ஆணைகளை சம்பந்தப்பட்ட கருவிகள் செயல்படுத்தும்.

அதேநேரம், 5ஜி பற்றிய பேச்சு தொடங்கிய காலம் முதலே இதன் ஆபத்து குறித்த எச்சரிக்கையை முக்கிய விஞ்ஞானிகள் உட்பட பலர் முன்வைத்து வருகின்றனர் என்பதும் இங்கே கவனத்துக்குரியது. இதன் மூலம் வெளிப்படும் மின்காந்த கதிர்வீச்சு (Laser-Like Beams Of Electromagnetic Radiation (EMR))மிகவும் ஆபத்தானது. இது ஏற்படுத்தும் Electro-Hypersensitive (EHS)பாதிப்பு மிகவும் ஆபத்தான ஒன்று என சுமார் நாற்பதற்கும் மேற்பட்ட அறிக்கைகளின் ஊடாக எச்சரித்துள்ளனர். பன்னாட்டளவிலான எச்சரிக்கை ஒன்றும் சென்ற ஆண்டு வெளியிடப்பட்டது குறிப்பிடத்தக்கது. நாற்பது நாடுகளைச் சேர்ந்த 180 விஞ்ஞானிகள், மருத்துவர்கள் இணைந்து, “5 ஜி அலைக்கற்றை சேவை தொடங்குவதை நிறுத்தி வைக்கும்”மாறு கோரி ஐரோப்பிய யூனியனுக்கு கடிதம் எழுதியுள்ளனர்.

தற்போது நாம் பயன்படுத்திவரும் கைபேசி தொழில்நுட்பங்களைப் போல, 5ஜி சேவையும் ரேடியோ அலைகள் மூலம் எடுத்துச் செல்லப்படும். தற்போது உயர்கோபுரங்களுக்கும் நம்கைபேசிகளுக்கும் இடையில் இந்த அலைக்கற்றைப் பரிமாற்றம் நடைபெற்றுதான் வருகிறது. எனவே, எல்லா நேரத்திலும் மின்காந்த கதிர்வீச்சுகள் நம்மைச் சுற்றி உள்ளன. தொலைக்காட்சி, வானொலி சிக்னல்கள், கைபேசிகள் உள்பட எல்லா வகையான தொழில்நுட்பங்கள் மூலம் உருவாகும் சிக்னல்களும், சூரிய ஒளி போன்ற இயற்கை ஆதாரங்கள் மூலமான கதிர்வீச்சுகளும் நம்மைச் சுற்றி உள்ளன. எனவே, 5ஜி புதிதாக ஆபத்தை விளைவிக்காது என்பது சிலர் வாக்கு.

ஆனால், ஏற்கெனவே உள்ள இந்த கதிர்வீச்சுகளை விட அதிக அதிர்வெண் கொண்ட சிக்னல்களை 5 ஜி தொழில்நுட்பம் பயன்படுத்தப் போகிறது. அதன் மூலம்தான் தற்போதுள்ளதைவிட இன்னும் அதிக எண்ணிக்கையிலான கைபேசிகள் இன்டர்நெட் சேவையை ஒரே நேரத்தில், இன்னும் அதிகமான வேகத்தில் பயன்படுத்துவதற்கு இது வகை செய்கிறது. அதாவது, 5 ஜி நெட்வொர்க் சேவைக்கு, முந்தைய தொழில்நுட்பங்களைவிட அதிக அளவிலான உயர்கோபுரங்கள், தரைப் பரப்புக்கு நெருக்கமாக அமைக்கப்பட உள்ளது என்கிறார்கள்.

எல்லா கைபேசி தொழில்நுட்பங்களிலும் பயன்படுத்தப்படும் மின்காந்தக் கதிர்வீச்சு, சில வகை புற்றுநோய் உள்பட உடல் நலனுக்குதீங்கு ஏற்படுத்துகிறது என்பதை விஞ்ஞானிகளே ஏற்றுக்கொள்கிறார்கள். ``அதிக அளவில் கைபேசி பயன்படுத்துபவர்களுக்கு புற்றுநோய் ஏற்படுவதற்கான ஆபத்து அதிகமாக உள்ளது” என்று புள்ளியியல் தகவல்களும் தெரிவிக்கின்றன. ஆனால், ``கைபேசி பயன்பாட்டால் உடல் நலனுக்கு கேடு ஏற்படுத்தும் எந்த பாதிப்பும் ஏற்படுவதில்லை” என்று உலக சுகாதார நிறுவனம்கூறி வந்தது. தற்போது, உலக சுகாதார நிறுவனமும் ரேடியோ அலைவரிசைக் கதிர்வீச்சுகள் `புற்றுநோயை உருவாக்கும் சாத்தியம்‘ கொண்டவை என்று கூறியுள்ளது. சர்வதேச புற்றுநோய் ஆராய்ச்சி முகமையும் (IARC) இதை கூறியுள்ளது.

அமெரிக்க சுகாதாரத் துறை 2018ஆம் ஆண்டில் வெளியிட்ட நச்சியல் குறித்த அறிக்கையில், அதிக அளவில் ரேடியோ அலைவரிசை கதிர்வீச்சுக்கு உட்படுத்தப்பட்ட ஆண் எலிகளுக்கு இருதயத்தில் புற்றுநோய்




கட்டிகள் உருவாவது தெரிய வந்திருக்கிறதுஎன்பது அலட்சியப்படுத்த முடியாதது.

ரேடியோ அலைவரிசை கதிரியக்கத்தை வெளி யிடுகிறது. கதிரியக்கம் புற்றுநோயை உருவாக்கும் என்ற நிலைபாடு 5ஜி அலைக்கற்றைக்கும் பொருந்தும். 5ஜி அலைக்கற்றை நீளம் குறைந்தவை. எனவே, 5ஜி அலைக்கற்றைக்கு பெரிய ஆன்டனா கோபுரங்களுடன், சிறு சிறு ஆன்டனா கோபுரங்களும் தேவை. சுமார் பத்து வீடுகளுக்கு ஒரு மினி ஆன்டனா கோபுரம் தேவைப்படுமாம். இப்படி மினி ஆன்டனா கோபுரங்கள் பல்கிப் பெருகி எங்கும் எப்போதும் கதிர்வீச்சு என்றாகிவிடும்.

தொடர்ந்து உமிழப்படும் கதிர்வீச்சு வாழும் உயிரினங்களின் உடல் கட்டமைப்பை மாற்றும். அல்லது சில செல்களைப் பாதிக்கவும் செய்யும். இந்த இரண்டில் எது நிகழ்ந்தாலும் அது புற்றுநோயை உருவாக்கும். புற்று நோய் தவிர வேறு உபாதைகளையும் 5 ஜி கொண்டுவரும். குமட்டல், வீக்கம், தலைமுடி உதிர்தல், பசியின்மை, சக்தி குறைதல், எலும்பு மஜ்ஜை சிதைதல், உடல் உறுப்புகள் கெட்டுப்போதல், ஆழ்ந்த மன அழுத்தம், மனக் குழப்பம், நோய்கள் தொற்றுதல், இயலாமை, இறப்பு போன்றவையும் 5ஜி பயன்பாடுகளுக்கு ஏற்ற மாதிரி பயனாளருக்கு வந்து சேரும் என்று சொல்லப்படுகிறது.

மைக்ரோவேவ் அடுப்புகளிலிருந்து கசியும் மின்காந்த கதிர்வீச்சு புற்று நோயை உருவாக்கும் சக்தி கொண்டது என்பது விஞ்ஞானிகள் ஒப்புக்கொண்ட விஷயம். இந்த மின்காந்த அலைகள் பூமியில் வாழும் உயிரினங்களின் டிஎன்ஏ அதாவது இனக்கீற்று அமிலத்தின் கட்டமைப்பை மாற்றிவிடும் ஆற்றல் கொண்டவை. 5 ஜியின் அறிமுகமோ நாடு, வீடு முழுக்க மைக்ரோவேவ் அடுப்புகளை இயங்கும் நிலையில் திறந்து வைப்பது போலாக்கிவிடும். அதனால்தான் கம்பியால் இணைக்கப்படாமல் இயங்கும் மின் கருவிகளுக்கு எதிராககுரல் கொடுப்பதாக விஞ் ஞானிகள் தெரிவித்துள்ளார்கள்.

எதிர்ப்பு தெரிவிப்பவர்களுக்கு, ``இப்போதைய சேவைகளுடன் 5 ஜி சேவை தொடங்கப்படும் போது, ரேடியோ அலைகளுக்கு ஆட்படும் அளவு சிறிதளவு அதிகரிக்கும் என்றாலும், அதிகமாக ஆட்படுதல் என்பது இருக்காது'' என்று பிரிட்டன் அரசு விளக்கம் கூறியுள்ளது.

ஐ.சி.என்.ஐ.ஆர்.பி. வழிகாட்டுகல்களில் பரிந்துரைக்கப்பட்ட அளவைக் காட்டிலும் குறைவான அலைவரிசையில் மின்காந்த அலைவரிசைக்கு ஆட்படுவதால், ஆரோக்கியத்திற்கு கேடு விளைவிக்கும் என்பதாகத் தெரியவில்லை என்று உலக சுகாதார நிறுவனமும் கூறியுள்ளது.

எது எப்படி இருந்தாலும் மக்கள் அச்சப்படுவது நிஜம். அந்த அச்சத்தை போக்க வேண்டியது அரசின் கடமை. ●

## Stan and Ollie

# ஒத்திகைப் பார்ப்பதைத் தவிர நம்மால் வேறு என்ன செய்ய முடியும்?!

**ராம் முரளி**

அயர்லாந்தை நோக்கி அந்த கப்பல் பயணம் செய்துகொண்டிருந்தது. புகழ்பெற்ற நகைச்சுவை இரட்டையர்களான லாரல், ஹார்டி தங்களது மேடை அரங்கேற்றத்திற்காக அதில் பயணிக்கிறார்கள். 1927ஆம் வருடத்தில் இருந்து தொடர்ச்சியாக திரைப்படங்களில் இணைந்து நடித்திருந்த லாரல், ஹார்டி தங்களது இறுதியான மேடை நிகழ்வுக்காக அயர்லாந்து செல்கிறார்கள். வயோதிகம் அவர்களை களைப்படைய செய்திருக்கிறது. கப்பலின் மேல்தளத்தில் அருகருகே அமர்ந்தபடியே, அடுத்து நடிப்பதாக இருக்கும் 'ராபின் ஹூட்' திரைப்படம் ஒன்றைப் பற்றி விவாதிக்கிறார்கள். கதையில் தங்களை எப்படியெல்லாம் வெளிப்படுத்தலாம் என்பது அவர்களது விவாதமாக இருக்கிறது. உடல் சோர்வையும் மீறி திரைப்படம் சார்ந்த உரையாடல் அவர்களை உற்சாகமூட்டுகிறது.

உண்மையில், 'ராபின் ஹூட்' திரைப்படம் அப்போது கைவிடப்பட்டிருந்தது. இருவரும் அதனை அறிந்தே வைத்திருந்தனர். நிதிப் பற்றாக்குறையால் கைவிடப்பட்டதாக, தயாரிப்பாளர் தரப்பில் சொல்லப்பட்டிருந்தது. ஆனாலும், லாரலும் ஹார்டியும் அந்த சுற்றுப்பயணம் முழுவதிலும் அதற்கான ஒத்திகைகளை செய்துகொண்டே இருந்தார்கள்.



கப்பல் மேல்தளத்தில் லாரல் தன்னருகில் அமர்ந்திருக்கும், தனது இணையானஹார்டியிடம்,"படம்கைவிடப்பட்டதை தெரிந்த பிறகும், நாம் ஏன் ஒத்திகைகளை செய்துகொண்டே இருக்கிறோம்?" எனக் கேட்கிறார். இரு நொடிகள் அமைதியாக அவரையே ஆழ்ந்துப் பார்க்கும் ஹார்டி, ஒரு விரக்தியான புன்னைகையுடன், "ஒத்திகைப் பார்ப்பதை தவிர நம்மால் வேறு என்னதான் செய்ய முடியும்?" என்கிறார். நெகிழ்வூட்டும் இசை பின்னணியில் ஒலிக்க, கேமிரா அவர்களது முகங்களில் இருந்து விலகிச் செல்கிறது.

ஜான்.எஸ். பேர்ட்டால் உருவாக்கப் பட்டிருக்கும் Stan and Ollie திரைப்படம் புகழ்பெற்ற நகைச்சுவை இரட்டையர்களான லாரல், ஹார்டியின் இறுதி தினங்களை பதிவு செய்திருக்கிறது. புதிய இளம் கலைஞர்கள் பலர் கண்டெடுக்கப்பட்டு, ஹாலிவுட் திரைத்துறையை ஆக்கிரமித்திருந்த காலமொன்றில் லாரல், ஹார்டியின் நிலை எவ்வாறிருந்தது என்பதை இத்திரைப்படம் உணர்வுப்பூர்வமாக காட்சிப்படுத்தியிருக்கிறது. அப்போது 'பழைய' முதல் தலைமுறையை சேர்ந்த லாரல், ஹார்டிக்கான திரைப்பட வாய்ப்புகள் மறுக்கப்பட்டிருந்தன. அதனால், இறுதி காலத்தில் மேடை நாடகங்களில் பங்கேற்பதற்காக பல்வேறு நாடுகளுக்கு அவர்கள் பயணித்துக் கொண்டிருந்தனர். அத்தகைய பயணம் ஒன்றின் அனுபவங்களின் வழியே இவர்களது உறவை ஆராய்கிறது Stan and Ollie திரைப்படம்.

A.J.Marriot எழுதிய 'Laural And Hardy - The British Tours' எனும் புத்தகத்தை தழுவி ஜெஃப் போப் திரைக்கதை அமைத்திருக்கிறார். எந்தவிதமான அவசியமற்ற சேர்ப்புகளும் இல்லாமல், மிக எளிமையாக திரைக்கதை உருவாக்கப்பட்டிருக்கிறது.

கிட்டதட்ட நூறு படங்களுக்கு மேலாக இருவரும் இணைந்து நடித்திருக்கிறார்கள். மௌன படமான The Second Hundread Years™ (1927) தொடங்கிய அவர்களது பயணம், பின்னர் பல்வேறு குறும்படங்கள், முழு நீளத் திரைப்படங்கள், பேசும் படங்கள், மேடை அரங்கேற்றங்கள் என முப்பது வருடங்களுக்கும் மேலாக நீண்டிருந்தது. சார்லி சாப்ளின், பஸ்டர் கீட்டன் போன்ற திறன்மிகுந்த நகைச்சுவை நடிகர்களின் ஆதிக்கம் மேலோங்கியிருந்த அதே காலகட்டத்தில்தான் லாரல், ஹார்டியும் தங்களுக்கென தனித்ததொரு பாதையை கட்டமைத்து பயணித்திருக்கிறார்கள்.

இருவருமே தனித்தனியாக சாப்ளின் உடனும் தொடக்க காலங்களில் சிறுசிறு வேடங்களில் நடித்திருக்கிறார்கள். அமெரிக்க நடிகரான டிக் வான் டைக் (Dick Van Dyke) சாப்ளினை விடவும் லாரல் மிகச் சிறந்த நடிகர் என்று குறிப்பிடுகிறார். "சாப்ளினிடம் யுத்திகள்தான் பெரிதும் வெளிப்படுகின்றன. ஆனால், லாரல் வெறும் யுத்திகளால் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறவர் இல்லை" என்பது அவரது வார்த்தைகளாகும்.



இப்போது வரையிலும் லாரல், ஹார்டியின் நகைச்சுவையை கொண்டாடும் ரசிகர்கள் இருக்கிறார்கள். 2005ஆம் வருடம் பிரிட்டன் மக்களிடம் நடத்தப்பட்ட தலைச் சிறந்த நகைச்சுவை நடிகர்களுக்கான கருத்து கணிப்பில் லாரல், ஹார்டிக்கு ஏழாவது இடம் கிடைத்தது. சாப்ளின் அப்பட்டியலில் பதினெட்டாவது இடத்தில் இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

Stan and Ollie திரைப்படம் மிகச் சரியாக லாரல், ஹார்டி பிரபலமாக இருந்த ஒரு காலத்தில் தொடங்குகிறது. அது 1937ஆம் வருடம். Way Out West எனும் திரைப்படத்தின் படப்பிடிப்பு அப்போது நிகழ்கிறது. லாரலும் ஹார்டியும் ஒப்பனை அறையில் இருந்து பல்வேறு விஷயங்களைப் பற்றி உரையாடியபடியே படப்பிடிப்பு தளத்துக்கு நடந்துச் செல்கிறார்கள். ஒற்றைய நீண்ட காட்சிப் பதிவாக அவர்களது உரையாடல் படம்பிடிக்கப் பட்டிருக்கிறது.

பொருளாதார நிலை, பெண்களுடனான உறவுநிலைகள், சாப்ளின் மற்றும் கீட்டனின் அபாரமான வளர்ச்சி என அவர்களது உரையாடல் நகர்ந்தபடியே இருக்கிறது. லாரலுக்கு தாங்கள் இருவரும் ஸ்டுடியோவின் கட்டுப்பாட்டில் இருந்து வெளியேறி சுயமாக இயங்க வேண்டும் எனும் விருப்பம் இருக்கிறது. அப்போதுதான் தங்களால் சாப்ளின் அளவுக்கு பெரும் புகழ்பெற முடியும் என கருதுகிறார். தங்களது திறன்களால் பயனடைவது தயாரிப்பாளர் ஹால் ரோச்தான் என்பது அவரது வாதம்.

ஒன்று சம்பளத் தொகையை உயர்த்த வேண்டும் அல்லது ஒப்பந்தத்தில் இருந்து இருவரும் விலகிவிட வேண்டும் என லாரல் நினைக்கிறார். ஹார்டிக்கு பணம் கொஞ்சம் கூடுதலாக கிடைத்தாலே போதும் என்றிருக்கிறது. எதையும் அனுசரித்து நடந்துகொள்ளும் இயல்பு கொண்டவர் ஹார்டி. அதனால், லாரலிடம் இந்த பிரச்சினையை பெரிதுப்படுத்த வேண்டாம் என்கிறார்.

படப்பிடிப்பு தளத்தை அடைந்தவுடன் ஹால் ரோச் அவர்களுக்கு முன்னால் எதிர்படுகிறார். லாரலுக்கும் அவருக்கும் இடையில் உடனடியாக வாக்குவாதம் தொடங்குகிறது. ஹால் ரோச்சுக்கு லாரலின் மீது அதிருப்தி உண்டாகிறது. உண்மையில், ஹால் ரோச்சுக்கு தேவையானவர் ஹார்டி மட்டும்தான். ஏனெனில், பெரிதான உருவம்கொண்ட ஹார்டியின் பாவனைகள்தான், இந்த இருவர் இணையின் பிரதானமான அம்சம் என்பது அவரது எண்ணம். தொடக்கத்தில், அவர்கள் இருவரையும் ஒருங்கிணைத்ததே ஹால் ரோச்தான். அதனால், லாரலை அவர் பொருட்படுத்துவதில்லை.

லாரலுக்கு மாற்றாக அடுத்தடுத்த திரைப்படங்களில் வேறொரு நடிகரை பயன்படுத்தப்படுத்த ஹால் முடிவு செய்கிறார். ஒப்பந்தத்தில் இருப்பதால், ஹார்டியால் அவரை மறுத்து பேச முடிவதில்லை. வேறொரு இணையுடன் சேர்ந்து நடிக்கத் தொடங்குகிறார். இதனால், பெரிதும் அவநம்பிக்கைக்குள்ளாகிறார் லாரல். அதன்பிறகும், அவ்வப்போது இருவரும் இணைந்து சில திரைப்படங்களில் நடித்திருக்கிறார்கள் என்றாலும், முன்புபோல அவர்களது உறவு சீரானதாக இல்லை.

அக்காலத்தில் வெளியான பெரும்பாலான நகைச்சுவை திரைப்படங்களில் பருமனான உடல்கொண்ட ஒரு நடிகரை பயன்படுத்தப்படுவது வழக்கமாகவே இருந்தது. அவரைச் சுற்றியே கதை

நகர்ந்து கொண்டிருக்கும். அவர்களது இயலாமை, களைப்பு, அசைவுகள், அசட்டுத்தனங்கள், நடனம் இயல்பாகவே பார்வையாளர்களிடத்தில் சிரிப்பலையை கிளர்த்திவிடும். ஹார்டி இதற்கு மிக கச்சிதமான பொருந்தக்கூடியவர். மேலும், அவரது நடிப்புதிறனும் ரசிகர்களை வெகுவாக கவர்ந்திருந்தது. இருவர் இணையில், தனது உருவத்தின் காரணமாகவும் அவர் தனியே தெரிந்தார். அதனால் ஹார்டியை ஹால் ரோச் தக்கவைத்துக்கொண்டார்.

லாரலை பொருத்தவரையில், அவர் இனி சுயமாக இயங்க வேண்டியிருந்தது. இருவர் கூட்டணி உருவாவதற்கு முன்பிருந்தே லாரல் தனித்து நடித்திருக்கிறார் என்றாலும், சாப்ளினைப் போலவோ அல்லது கீட்டனைப்போலவோ அவரால் ஒரு அலையை உருவாக்க முடியவில்லை. அவரது நகைச்சுவை பெரிதும் சம்பவங்களால் கட்டமைக்கப்பட்டிருந்ததே அன்றி, தனிநபரை பிரதானப்படுத்தும் அம்சம் எதுவும் இருக்கவில்லை. ஹார்டியுடன் இணைந்துதான் தனது பிம்பத்தையும் லாரல் கட்டமைக்க வேண்டியிருந்தது.

ஹாலின் நடவடிக்கையால், லாரல் கடும் மன வேதனைக்கு உள்ளாகிறார். ஹார்டியும் தனக்கு ஆதரவாக இல்லை என்பது மேலும் அவரை துயரத்தில் ஆழ்த்துகிறது. இருவரது இணையில் ஏற்பட்ட விரிசலில் பெரிதும் பாதிக்கப்பட்டது நிச்சயமாக லாரல்தான். “நேற்று வரையில் ஹாலிவுட்டில் நான் பிரதான நட்சத்திரம். இன்று நான் யாருக்கும் தேவையானவன் இல்லை” என்று லாரல் ஒருமுறை குறிப்பிட்டிருக்கிறார்.

ஹார்டியை தன் பக்கம் இழுக்க நினைத்த லாரலின் முயற்சிகள் எதுவும் கைக்கூடவில்லை. பெரும் சிரமத்துக்கு இடையில் லாரலின் காலம் உருண்டோடியது.

பல வருடங்களுக்கு பிறகு, இருவரும் லண்டனுக்கு தங்களது வயதேறிய காலத்தில் சுற்றுப் பயணம் செய்கிறார்கள். பல்வேறு மேடைகளில் நிகழ்வுகளை நடத்துகிறார்கள். சிறுக சிறுக அவர்களது மீள்வருகை மக்கள் மத்தியில் வரவேற்பை பெருகிறது. நாளுக்கு நாள் கூட்டம் அதிகரிக்கிறது. அரங்கத்தில் ஆரவாரம் பெருகுகிறது.

இந்த நிலையில், ஒரு விருந்தின்போது லாரலும் ஹார்டியும் கடந்த காலத்தைப் பற்றி உரையாடுகிறார்கள். லாரல், “நீ நமது நட்புக்கு பெரும் துரோகம் இழைத்துவிட்டாய். நான் நம்மை மிகவும் நேசித்தேன்” என்று தனது மனக்குமுறலை வெளிப்படுத்த, ஹார்டியும் உணர்ச்சி வேகத்தில், “நாம் நண்பர்கள் என்று யார் சொன்னது? ஹால் நம்மை சேர்ந்து நடிக்கச் செய்ததால், நாம் ஒன்றாக பயணிக்க வேண்டியிருந்தது. மற்றபடி நமக்குள் எந்த நட்பும் இல்லை. நீ லாரல் – ஹார்டியைதான் நேசித்தாய். ஆனால், ஒருபோதும் என்னை நேசித்திருக்கவில்லை” என்று கலங்கிய கண்களுடன் பேசிவிட்டு நகர்வார்.

லாரல் உணர்ச்சிவசப்பட்டு, தனது தொப்பியால் அவரை தாக்க, அவரும் பதிலுக்கு தாக்குவார்.




மனதை நெகிழச் செய்யும் அக்காட்சியின்போது சுற்றி இருக்கும் அனைவரும், அவர்களுக்குள் நிகழ்ந்த இந்த சிறு முரணைப் பார்த்து வாய்விட்டு சிரிப்பார்கள். அவர்களை பொருத்தவரையில், லாரல் – ஹார்டி எது செய்தாலும் அது நகைப்புக்குரியதுதான்.

இந்த தருணத்திற்கு பிறகு, ஹார்டியின் உடல் மேலும் மேலும் களைப்புறுகிறது. நோய்மையில் வீழ்கிறார். அவர் இனி மேடையில் நடிக்கக்கூடாது என மருத்துவரால் அறிவுறுத்தப்படுகிறார். இதனால், இப்போது ஹார்டிக்கு மாற்றாக வேறொரு பருமனான நடிகரை பயன்படுத்தலாம் என நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் முடிவு செய்கிறார். ஹார்டி இல்லாத மேடையில் தானும் இனி நடிப்பதில்லை என்று நிகழ்ச்சியை ரத்து செய்துவிடுகிறார் லாரல்.

தனது அறையில் போர்வைக்குள் சுருண்டிருக்கும் ஹார்டியை பார்க்க லாரல் வருகிறார். அருகில் அமர்ந்து, உடல் நலத்தை விசாரித்துவிட்டு, “அன்று என்னை உன் நண்பன் இல்லை என்று சொன்னது பொய்தானே?” எனக் கேட்கிறார். ஹார்டி நெகிழ்வுடன் தலையசைத்துவிட்டு, லாரலின் கைகளைப் பற்றிக்கொள்ள, இருவரும் உறைந்த நிலையில் அப்படியே அமர்ந்திருக்கிறார்கள். ஒருவர் மீதான மற்றவரின் ஆழமான நேசிப்பு வெகு அழகாக இக்காட்சியில் வெளிப்படுகிறது. ஹார்டிக்கு மீண்டுமொருமுறை லாரலுடன் இணைந்து மேடை ஏற வேண்டும் என்கின்ற ஆசை இதன்பிறகு உண்டாகிறது.

நோய்மையையும் மீறி லாரலுடன் இணைந்து மேடை ஏறுகிறார் ஹார்டி. உடல் வலியெடுக்கும் நிலையில் மக்களின் முன்னால் தனது அசட்டுத்தனமான



நடனத்தால் சிரிப்பை உண்டாக்குகிறார். தங்களது முப்பது வருட நட்புக்கான ஒரு சிறிய பாராட்டு போல இருக்கிறது அரங்கத்தில் ஹார்டியின் வெளிப்பாடு. அவர்களது அனைத்து ஆக்கங்களுக்கும் எதிர்வினை புரிந்ததைப்போலவே, அப்போதும் சிரித்து கொண்டாடுகிறார்கள் பார்வையாளர்கள். லாரலும் ஹார்டியும் இறுதி இறுதியாய் உயிர்ப்புடன் மக்கள் முன்னிலையில் இருந்து விடைபெறுகிறார்கள். கேமிராவில் பதிவாக்கப்பட்டிருக்கும் அவர்களது செய்கைகள் மட்டுமே லாரல், ஹார்டியின் திறன்களை காலகாலமாய் முன்னகர்த்திக்கொண்டே இருக்கிறது.

இந்த சுற்றுப்பயணத்திற்கு பின்னர், இருவருமே திரைப்படங்களிலோ அல்லது மேடை அரங்கேற்றங்களிலோ பங்கேற்கவேயில்லை. அந்த சுற்றுப்பயணம்தான் லாரலும், ஹார்டியும் இணைந்து பங்கேற்ற கடைசி நிகழ்வு.

முப்பது வருடங்கள் லாரல், ஹார்டி என்கின்ற ஒற்றைய பிம்பத்தை இருவரும் பகிர்ந்திருக்கிறார்கள். பின்காலத்திய பல கலைஞர்களுக்கு உந்துதலாக திகழ்ந்திருக்கிறார்கள். படத்தின் ஒரு காட்சியில், “காலங்களை தாண்டியும் நம்மை மக்கள் நினைவில் வைத்திருப்பார்கள்” என்பார் லாரல். இன்றும் நாம் லாரல், ஹார்டி என்றே அவர்களை இணைத்துதான் அடையாளப்படுத்துகிறோமே தவிர, தனித்தனி கலைஞர்களாக அல்ல.

லண்டன் சுற்றுப் பயணத்திற்கு பின்னர் நான்கு வருடங்களுக்கு பிறகு ஹார்டி மரணம் எய்திவிட, லாரலும் நடிப்பில் இருந்து முற்றிலுமாக ஒதுங்கிவிட்டார். அந்த குறிப்பிட்ட வருடங்களில் எந்தவொரு நடிப்பு செயல்பாட்டையும் அவர்கள் இருவரும் செய்திருக்கவில்லை. உருப்பெறாத ஒரு நிகழ்வுக்கான ஒத்திகைகளிலேயே அவர்களது காலம் கழிந்திருக்கும்.

திரைவெளியில் பல்வேறு கதாப்பாத்திரங்களை தங்களின் மீது நிகழ்த்தி காட்டும் கலைஞர்களின் சுய வாழ்க்கை அலைகழிப்புகளையும் போராட்டங்களையும் எவரொருவரும் அறிந்திருப்பதில்லை. நாம் அவர்களை திரையின் மீது படரும் பிம்பங்களாகவே பாவிக்கிறோம். அல்லது யதார்த்த வாழ்க்கையில் இருந்து துண்டிக்கப்பட்ட உச்ச நட்சத்திரங்களாக கருதி மோகிக்கிறோம். வூட்டி ஆலன் ஒருமுறை, “திரைப்படங்களில் நான் நகைச்சுவையாக தோன்றுவதைப்போலவே, யதார்த்ததிலும் இருக்க வேண்டும் என மக்கள் விரும்புகிறார்கள்” என்றார். ஆனால், அனைத்துவிதமான புறவுலக சவால்களையும் எதிர்கொள்ளும் எளிய உயிர்கள்தான் திரையுலக கலைஞர்களும் என்பதை இதுபோன்ற அரிதான சில திரைப்படங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

Stan and Ollie பெரும் சலனத்தை உருவாக்கிய இரண்டு அற்புத கலைஞர்களை நினைவுப்படுத்துவதோடு, கூடுதல் நெருக்கமாக அவர்களை உணரவும் வழிவகை செய்கிறது. ●

**ராம் முரளி <raammurali@gmail.com>**

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



Rs. 120



Rs. 90



Rs. 140



Rs. 150



Rs. 100



Rs. 90



Rs. 150



Rs. 90



Rs. 100

**அம்ருதா**
#1, கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி.ஐ.டி. நகர் கிழக்கு, நந்தனம், சென்னை 600 035. தொலைபேசி: 73387 57878, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com, www.amruthamagazine.com

# இது கனவல்ல அபூர்வமான நிஜம்

## வைதீஸ்வரன்

ஆச்சரியமாக இருக்கிறது, இன்று என் அம்மா என் பகல் கனவில் தத்ரூபமாக வந்து பேசி சிரித்துவிட்டுப் போனது!!!

ஒரு காரணமாக இன்று அம்மாவின் வருஷ திதி என்று சொல்லலாம். ஆனால், அதற்காக நான் வெகு சம்பிரதாயமாக ஆசார நியமனமாக எதுவும் செய்யவில்லை. மாம்பலத்தில் உள்ள ராகவேந்திரா மடத்தில் 750 ரூபாய் பணத்தைக் கட்டி பத்து ஏழைகளுக்கு அன்னதானம் செய்வித்தேன். அர்க்கியம் விட்டேன், அவ்வளவுதான். அதோடு மறந்துவிட்டு வேறு காரியங்களைப் பார்த்து வீடு திரும்பினேன். ஏதோ கடமை முடிந்தது. அம்மாவின் ஞாபகம் சுத்தமாக மறந்துவிட்டது.

பிறகு உண்ட பிறகு வந்த பகல் தூக்கக் கனாவில், நான் சென்றது என் ஆபீஸ் சிநேகிதன் அனந்து வீட்டுக்கு. நாங்கள் இருவரும் அவன் வீட்டு உள்ளறையில் கட்டிலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது திடீரென்று இடது கதவைத் திறந்துகொண்டு கையில் காபியுடன் எட்டுமுழப் புடவை கட்டிக்கொண்டு ஒரு மாமி உள்ளே நுழைந்தாள். நான் யாரென்று பார்க்க தலை தூக்கினேன், "அம்ம்மா!!!"

எனக்கு திக்கென்று இருந்தது. அதிர்ச்சியாகவும் இருந்தது. அப்படியே அசல் தத்ரூபம். என்ன அதிசயம், நான் சடாரென்று எழுந்து நின்றேன். அவள் கையிலிருந்த காபியை என்னிடம் கொடுத்தாள். நான் வாங்கி அருகில் உள்ள ஸ்டூலில் வைத்தேன். அதற்குள் அவள் கட்டிலில் படுத்துக்கொண்டு விட்டாள். பலமாக சிரித்தாள். மிக்க இளமையாக இருந்தாள். பல்வரிசை சீராக இருந்தது!!!

நான், "எப்படி வந்தே", "எங்கே இருந்து வந்தே?" என்று நிறையக் கேள்விகள் கேட்கிறேன். "உன் பேரன் மூர்த்தி இப்போ வந்திருந்தான்" என்கிறேன்.

"மூர்த்தியா?" என்று ஏதோ கேட்கிறாள். அவளுக்கு அடையாளம் தெரியவில்லை. கடைசியாக, "அந்த சமையல் பொண்ணு மஞ்சு ரொம்ப கஷ்டப்படறாளா? அவா குடும்பத்துலே தொந்தரவா?" என்று மட்டும் சொல்லுகிறாள்.

எனக்கு சற்று ஏமாற்றமாக இருக்கிறது. உடனே வீட்டில் என் மனைவிக்குப் போன் பண்ணி அம்மாவைப் பார்க்க உடனே வரவழைக்க வேண்டுமென்று செல்போனை எடுக்கிறேன். எடுத்த உடனே செல்போன் புடைத்துக்கொண்டு உருண்டையாக ஆகிவிடுகிறது!!

அம்மாவின் உருவமும் தேய்ந்துகொண்டே வருகிறது. ஸ்டூலில் வைத்த காபி ஞாபகம் வருகிறது. எடுத்துக் குடிக்கிறேன். அதற்குள் அம்மா முழுக்க மறைந்து காணாமல் போய்விடுகிறாள். என் செல்போன் சகஜ உருவத்துக்கு வருகிறது!!.



நடந்தது அவ்வளவு நிஜமாக இருந்தது.

நான் அனந்துவிடம் பரபரப்பாக விடை சொல்லிவிட்டு, உடனே வீட்டுக்குப் போய் இங்கே நடந்ததை சொல்ல வேண்டுமென்று வேகமாக வெளியேறுகிறேன். ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு கிளம்பியவுடன் எதிரே வந்த தெருக்களே அடையாளமில்லாமல் மாறிப் போயிருக்கிறது.

வீடு திரும்பும் வழி சுத்தமாக காணமல் போய் குழப்பமாக நடுச் சந்தியில் நின்று கொண்டிருந்தேன். நெஞ்சில் பசுமையாக இருக்கும் கனவு அழிந்து மறந்து போவதற்கு முன்னால் வீட்டுக்கு போய் இதை சொல்ல வேண்டுமென்று அவசரத்தில் மனசு தவிக்கிறது. சூல் முற்றிய தாயின் வேதனை வலியுடன் நான் அம்மாவின் கனவை சுமந்துகொண்டு வீடு திரும்பும் வழிக்காக தவித்துக் கொண்டிருக்கிறேன்.

மெல்ல மெல்ல கோடம்பாக்கமாக திருவெல்லிக்கேணி மாறிக்கொண்டு வருகிறது. அதோ அசோக்நகர். அதோ மேற்கு மாம்பலம். அதோ ரங்கராஜபுரம்...

இந்த அவஸ்தைக்கு நடுவில் கத்தி மாதிரி ஒரு குரல் உள்ளே பாய்ந்தது. "ஏன்னா, மணி நாலறையாறது. காபி கலக்கட்டுமா?" மனைவியின் நிஜக் குரல்!

நான் திடுக்கிட்டு எழுந்த போது அந்த நிஜத்தை நம்பவே முடியவில்லை. நான் இருந்த கனவு உலகம் இன்னும் அத்தனை நிஜமாக பளிச்சென்று இருந்தது. அம்மாவின் திதியன்று இப்படி ஒரு கனவு. இதெல்லாம் திட்டமிட்டு தோன்றக் கூடியதா?? ●

வைதீஸ்வரன் <vydheesw@yahoo.com>

புதிய தொடர்

# நான் பிறந்த க-வி-தை

## ஷங்கர்ராமசுப்ரமணியன்

### தன்னை மறக்கும் கவிதை

பள்ளிப் பருவத்திலிருந்து எனது முதல் தொகுதி வருவதற்கு முந்தைய காலம் வரையில் என்னைப் பாதித்த கவிதைகளை, அது பாதித்திருந்த போது இருந்த உணர்வுகளைச் சென்று பார்ப்பதுதான் இந்தத் தொடரின் முதல் நோக்கம். அத்துடன் கவிதை சார்ந்து இப்போதிருக்கும் எனது எண்ணங்களையும் ஒவ்வொரு கட்டுரையிலும் பகிர்ந்துகொள்ளவும் செய்வேன். குறுந்தொகையிலிருந்து இத்தொடரைத் தொடங்குகிறேன்.

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிது எனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.

- கூடலூர் கிழார், குறுந்தொகை

*முற்றிய தயிரைப் பிசைந்த, காந்தள் மலரைப் போன்ற, மெல்லிய விரலைத் துடைத்துக்கொண்ட ஆடையை, துவைக்காமல் உடுத்துக்கொண்டு, குவளை மலரைப் போன்ற மையுண்ட கண்களில், தாளிதப் புகை மணப்ப, தானே துழாவிச் சமைத்த, இனிய புளிச்சுவையை உடைய குழம்பை, தலைவன் இனிது என்று உண்பதால், தலைவியின் விளக்கத்தை உடைய நெற்றியை உடைய முகமானது, மிக நுண்மையாக மகிழ்ந்தது.*

*(உ. வே. சா. உரையிலிருந்து)*

பதினான்கு அல்லது பதினைந்து வயது இருக்கலாம். திருநெல்வேலி சாப்டர் பள்ளியில், தமிழாசரியர் ஆறுமுகம் விளக்கம் சொன்ன இக்கவிதையில் வரும் இரண்டு காட்சிகள் மட்டும் அன்றும் இன்றும் என் நினைவில் இருப்பது. அந்த நினைவைச் சொன்னபோது, கவிஞர் ஜயபாஸ்கரன் தான் அதை குறுந்தொகை கவிதை என்று கூறி அடையாளம் காட்டினார்.



இந்தக் கவிதையில் வரும் தலைவியின் மைபூசிய கண்கள் சிவந்து கனிந்திருக்கும் காட்சி; துவைக்காமல் அவள் உடுத்தியிருக்கும் கையைத் துடைத்துக் கொள்ளக்கூடிய மென்மையான ஆடை; இரண்டும் காட்சிகளாகவே, அந்தக் கவிதை குறித்து வகுப்பெடுத்து நெடுநாள் ஆகியும் உள்ளே தழும்பிக் கொண்டிருந்தது.

பெண்ணை உடலின் அங்கம் அங்கமாகத் தனியாக இல்லாமல் முழுமையாகவும் முகத்தைக் கூர்ந்தும் பார்க்கத் தொடங்கிய வயது அது. ஒரு வீட்டில் தனது செவிலித் தாயின் முன்னர் தான் நடத்தும் சந்தோஷமான தாம்பத்தியத்தை ஒரு காட்சி வழியாக நிகழ்த்திக் காட்டிவிடுகிற பெண்ணின் ஓவியம் உள்ளது. இந்தக் கவிதையில் தாயை விட்டு வந்த குற்றவுணர்வு ஏதும் இல்லை. 'உன்னை விட்டுப் போனபின் எத்தனை மகிழ்ச்சியாக இருக்கிறாள்' என்ற செவிலித்தாய் நற்றாயைப் பார்த்துச் சொல்லும் குத்தலும் இல்லை. ஒரு காட்சி இருக்கிறது.

தாயுடன் வாழும்போது சாப்பிட்ட பாத்திரத்தைக் கூட எடுத்து புழக்கடையில் அங்கணத்தில் போடாத செல்லமாய் அவள் இருந்திருக்கலாம். ஆனால், காதலனுடன் மணம்புரிந்து அவள் வீடான பிறகு அவள் மாறிவிட்டது இயற்கையாக உள்ளது. அது ஒரு நியதி என்பது போலச் சொல்லப்படுகிறது. நியதி என்னும்போது அதன் மேல் துயரத்தின் அழுத்தமும் இந்தக் கவிதையில் இல்லை. இயற்கை போல, மகளாக இருந்தவள், மனைவியாக தலைவியாக மாறிவிட்டாள்.

முற்றிய தயிரைப் பிசைந்த காந்தள் மலரைப் போன்ற மெல்லிய தலைவியின் விரலை வர்ணிக்கும்போதும், குவளைமலர் போன்றமையுண்ட கண்களில் புகைபடிந்து இனிய புளிச்சுவை கொண்ட குழம்பு சிகப்பாவதும், அவள் சமையலறையில் பொருட்களுடன் கூடும் உறவை மட்டும் பேசவில்லை என்று தோன்றுகிறது. வெளியே உள்ள பொருட்களுடன் கொள்ளும் உறவில் கூடுதலில் முயங்கலில் உருவாகும் சமையல் ருசி, அவள் புகுந்த புது வீட்டில் நடக்கும் இன்னொரு சமையலை, புதிய குடித்தனத்தின் உள்ளறைக் காட்சிகளை நமக்குத் தெரிவிக்கிறது.

அவள் அங்கே அப்போது இருந்தாள்; இப்போது அவள் இங்கே இருக்கிறாள்; இங்கே இயற்கையும் இயல்பும் நியதியும் மாறிவிட்டது. அதைச் செவிலித் தாய் சேர்த்து நமக்கும் நற்றாய்க்கும் காண்பிக்கிறாள். அவ்வளவுதான்.

வீட்டிலிருந்து ஓடிப்போய் புதிய கணவனுடன் குடித்தனம் நடத்தும் லட்சணத்தை, சந்தோஷத்தை, மாறுதல் தான் நியதி என்னும் உண்மையை நற்றாய்க்குச் சொல்லும் செவிலித்தாய் தானோ கவிதை.

'பொருள்' என்பதற்கு ஆசீவகம் கூறும் மூன்று பண்புகளை கவிதைக்கும் விரித்துப் பார்க்கலாம். உயிருள்ளது, உயிரற்றது, உயிருள்ளதும் உயிரற்றதும் சேர்ந்தது; உலகம், உலகம் அல்லாதது, உலகமுள்ளதும் உலகம் அல்லாததும் சேர்ந்தது; உண்மை, உண்மையற்றது, உண்மையும் உண்மையின்மையும் சேர்ந்தது; கவிதையில் இன்னொரு கூறும் சேருகிறது. சொல்லப்படுவதும் சொல்லப்படாததும்.

கூடலூர் கிழாரின் கவிதையில் ஒரு கணம் மட்டுமே சொல்லப்படுகிறது. அதற்கு இறந்த காலமோ நிகழ்காலமோ இல்லை. நூல் கண்டு, விடுபட்டு



ஓடிக்கொண்டிருக்கும் போது பார்க்கப்படும் ஒரு துண்டுக் காட்சியைச் சொல்கிறது. துவக்கமோ முடிவோ இல்லை. அந்தக் கவிதை கொடுக்கும் காட்சியிலிருக்கும் சந்தோஷம் செவிலித் தாயின் தலை மறைந்தவுடன் மாறிவிடலாம். அல்லது அந்தச் சந்தோஷம் பின்மதியத்தில் கூடுதலாக முடுக்கம் கொள்ளலாம். அதுவேறு நியதி; அது வேறு கதி.

இந்தக் கவிதையில் பார்ப்பவள் பெண்; பார்க்கப்படுபவளும் பெண். சமையலில் ஈடுபடும் பெண், இன்னொன்றில் ஈடுபடுகிறாள். இன்னொரு உயிர் அல்லது பொருளுடன் அவள் ஈடுபடும்போது தன்னை மறக்கிறாள். அப்போதுதான் உணவு பிறக்கிறது. அப்போது அவள் செல்லமாக வளர்க்கப்பட்ட இன்னொரு ஊரில் வாழும் பெற்றோரின் மகள் அல்ல. அவள் ஈடுபடும்போதுதான் சமையலும் தாம்பத்தியமும் அதன் விளைவான குழந்தையும் பிரசவமாகிறது.

சமீபத்தில் என் மகளுடன் திருநெல்வேலிக்குப் போயிருந்த போது, எப்போதும் செல்லும் திருவேங்கடநாதபுரம் பெருமாள் கோயிலுக்கு அருகில், தாழ ஓடும் தாமிரபரணி ஆற்றைப் பார்க்கப் போயிருந்தேன். பேருந்துக்காகக் காத்திருந்த போது, இசக்கியம்மன் கோயிலுக்குக் கொடை நடத்துவதைப் பற்றி அங்கிருந்த பெரியவர்கள் பேசிக் கொண்டிருந்தனர்.

புதியதாக நாடகம், இசைக் கச்சேரி எல்லாம் நடத்தவேண்டும் என்று இளைஞர்கள் விடுத்த கோரிக்கையை நிராகரித்து அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது இருட்டு ஆகி யிருந்தது.

அந்த இருட்டில் முகம் நிழல்கோடுகளாகிப் போன பாட்டையாவின் முகம் பேசியது. “அந்தக் காலத்தில் பெண்களை மேடை ஏத்தாததுக்குக் காரணம் இருக்கு. அவள் மேடை ஏறி ஆடும்போது தன்னை மறந்துவிடுவாள்” என்றார்.

விடுபட்டுப் போன நூல்கண்டு ஓடிக்கொண்டிருக்கிறது. நூலை ஞாபகம் வைத்துக்கொண்டே இருப்பதுதான் ‘தான்’ போல. அந்தத் தானை மறக்கும்போது அவள் பெண் ஆகிறாள். அப்போதுதான் அவள் ஈடுபடுகிறாள், படைக்கிறாள்.

இந்தக் குறுந்தொகைக் கவிதையும் ஒரு நியதியில் ஈடுபடுகிறது. அதனால், அதற்கு ஜனன உறுப்பு உள்ளது. அதனால் அவளும் அதுவும் படைக்கிறது.

அதனால், எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னர் ஒரு காலத்தில், ஒரு பின்னணியில் எழுதப்பட்ட கவிதை, அகாலத்தின் ஆசீர்வாதத்தில் பழைமை ஏறாமல் பருவத்தின் படியேறும் 20ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு சிறுவனையும் ஈர்த்தபடி உள்ளது.

**ஷங்கர்ராமசுப்ரமணியன் <shankarashankara@gmail.com>**

## ரோஜா

பிரான்சிஸ்கோ கார்சியா லோர்க்கா
தமிழில்: சுந்தர ராமசாமி

அதிகாலையைத் தேடவில்லை ரோஜா
அதன் கிளையில் கிட்டத்தட்ட நிரந்தரமாக
மற்றொன்றைத் தேடி நிற்கிறது அது.
ரோஜா அறிவையோ நிழலையோ தேடவில்லை
சதைக்கும் கனவுகளுக்கும்
எல்லைக்கோடான அது
மற்றொன்றைத் தேடுகிறது.
ரோஜா ரோஜாவைத் தேடவில்லை.
வானத்தில் அசைவற்று நின்று
மற்றொன்றைத் தேடுகிறது அது.

# சாவித்திரி சரித்திரம் முத்துமீனாட்சியான கதை

## கால சுப்ரமணியம்

தமிழில் நாவல் என்ற நவீன இலக்கிய வடிவம், தமிழ்ச் சிறுகதை வடிவம் தோன்றும் முன்னரே, பலவித எடுத்துரைப்புகளுடன் பிரசுரம் பெற ஆரம்பித்துவிட்டது. தமிழில் நவீன நாவல் தோன்றி, சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்பே நவீன சிறுகதை தோன்ற ஆரம்பிக்கிறது. வீரமாமுனிவர் (1680 - 1747) படைத்த 'பரமார்த்தகுரு கதை' (அச்சில் 1728, சென்னை கல்விச் சங்கம் 1822), முத்துக்குட்டிப் புலவர் சொன்ன 'வசன சம்பிரதாயக் கதை' 1775 (அச்சில்1895), சேஷய்யங்கார் எழுதிய கவிதை நாவலான 'ஆதியூர் அவதானி' (1875) நவீனத் தமிழ் நாவலின் முன்வடிவங்கள் எனலாம்.

'அரேபிய இரவுக் கதை', 'கதாசரித் சாகரம்', 'விக்கிரமாதித்தன் கதை', 'மதனகாமரேஜன் கதை', 'டான்குவிக்ஸாட்', கிறிஸ்தவ சமய நீதிக் கதைகள், சிறார் கல்விக்கான தேவதைக் கதைகள் போன்றவற்றின் கதைப் பாணியில், வேறு சில தமிழ் நெடுங்கதைகளும், புதியமுறையில் கதைசொல்லும் சில முயற்சிகளாகத்தான் 'பிரதாப முதலியார் சரித்திரம்' எழுவதற்கு முன்பு தோன்றியுள்ளன. ஆங்கில நவ இலக்கியக் கதை வடிவைக் கற்றிருந்தாலும், மேல் கூறிய வாய்மொழிக் காவியக் கதை மரபைத்தான் வேதநாயகம் பிள்ளை, 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்ற நவீனமான வளர்த்தெடுத்துப் படைக்கிறார்.



19ஆம் நூற்றாண்டில் இறுதிப் பகுதியில் தோன்றிய தமிழ் நாவல் வரலாற்றின் ஆரம்பக் கால கட்டம், வாய்மொழிச் சொல்கதை மரபையும் மேலைநாட்டு நவீன இலக்கியத் தாக்கத்தையும் சமூக சீர்திருத்த விமரிசன பிரச்சார நோக்கத்தையும் கருக்கள மையமாகக்கொண்டு வளர்ந்தது.

தமிழின் முதலாவது நாவலாசிரியராகக் கருதப்படும் (1879) வேதநாயகத்துக்கும் இரண்டாவது மூன்றாவது நாவலாசிரியர்களாக வரிசைப்படுத்தப்படும் ராஜமையர் (1896), மாதவையா (1898) போன்றோரின் நாவல்களுக்கும் இடையிலும் தொடர்ந்தும், வாய்மொழிக் கதை மரபின் வழி வந்த வேறு சில நவீனங்களையும் காண முடிகிறது. வளர வளர வெகுஜன நாவல் தன்மை கூடுகிறது.

தி.கோ.நாராயணசாமி பிள்ளையின் 'சித்திரங்காட்டி சத்தியம் நிறுத்திய கதை' (1879), 'விநோத சரித்திரம்' (1886), 'மாமி மருகியர் வாழ்க்கை' (1892); முகமது காசிம் சித்திலெப்பை மரக்காயரின் 'அசன்பே சரித்திரம்' (1885), புஷ்பரதச் செட்டியின் 'அகல்யாபாய்' (1885), வேதநாயகத்தின் மற்றொரு நாவல் 'சுகுண சுந்தரி சரித்திரம்' (1887), சி.ஈ. சுப்பிரமணிய அய்யரின் 'கற்பின் விஜயம் அல்லது சத்தியாம்பாள் கதை' (1888), இலங்கை எஸ்.இன்னாசித் தம்பியின் 'ஊசேன் பாலந்தை கதை' (1891), சு.வை. குருசாமி சர்மாவின் குறிப்பிடத்தக்க காதல் கதையான 'பிரேம கலாவத்யம்' (1893), தி. சரவணமுத்துப் பிள்ளையின் முன்னோடிச் சரித்திர நாவலான 'மோகனாங்கி' (1895), ராஜாத்தி அம்மாள் என்ற பெண் எழுத்தாளரின் 'ஞானப்பிரகாசம்' (1897), ச. ராமசாமி ஐயங்காரின் 'கமலினி' (1897), தி.எல். துரைசாமி முதலியாரின் 'குணபூசணி' (1897), சி. அருமைநாயகத்தின் கிறிஸ்தவ நாவலான 'மீதி இருள்' (1898), கோவிந்தசாமி ராஜாவின் தழுவல் நாவலான 'மரகதவல்லி' (1898), ஏ.கே. கோபாலச்சாரியின் 'ஜீவரத்னம்' (1899), பண்டித நடேச சாஸ்திரியின் தமிழின் நான்காவது நாவலாகக் கருதப்படும் 'தீன தயாளு' (1900), ஸ்ரீநிவாச ஐயங்காரின் 'சிவாஜி ரௌஸினாரா' (1903), எஸ்.கூத்தலிங்கம் பிள்ளையின் 'மங்கம்மாள்' (1903), குழந்தைசாமி பிள்ளையின் 'சத்தியவல்லி' (1910), தமிழின் ஐந்தாவது நாவலாசிரியராகக் கருதப்படும் திரிசிரபுரம் பொன்னுசாமி பிள்ளையின் 'கமலாட்சி' (1910)... இப்படியாக இன்னும் சில...

வரலாற்றில் எழும் சமூகக் கலாச்சார எதிர்ப்புகள், சமய மரபையே கலாச்சார மரபாகக் கொண்ட சமுதாயத்தில், ஒடுக்கப்பட்டவர்களும் மனிதாபிமானிகளும், பகுத்தறிவைப் பிரதானமாக்கி சமயத்தை எதிர்த்து நாஸ்திகராகி விடுவதும், அந்நிய மதத்தையும் பண்பாட்டையும் தழுவிக் கொள்ளுவதும், தம் மதத்தைப் பற்றிய பரிசோதனையில் இறங்கித் தம்மைத்தாமே சீர்திருத்தி மேம்படுத்தும் முயற்சிகளை

மேற்கொள்வதுமாக வெளிப்படும். ஐரோப்பாவில் அரச எதேச்சாதிகாரத்தையும் கிறிஸ்தவக் கொடுங்கோன்மையையும் எதிர்த்து இவ்வாறான இயக்கங்கள் எழுந்தது போலவே, இந்தியாவிலும் தமிழகத்திலும் இப்படி, கடவுள் மறுப்பு இயக்கமும் கிறிஸ்தவ இஸ்லாமிய மதமாற்றமும் ஆரிய சமாஜ, பிரம்ம சமாஜ இந்து மலர்ச்சியும் ஏற்பட்டன. இன்று இவற்றை அடக்கி ஒடுக்கி பழைமையை நிலைநாட்ட நினைக்கும் அடிப்படைவாதங்களாக இந்துத்துவாவும் தேசியவாதமும் இஸ்லாமியப் பயங்கரவாதமும் எழுந்துள்ளன. இந்த வரலாற்று நியதிகளுக்கும் விஞ்ஞானபூர்வ நடவடிக்கைகளுக்கும் மேலை வரலாற்றிலும் இந்தியாவிலும் தமிழகத்திலும் பல உதாரணங்களைக் காட்டலாம். அடக்கப்பட்டவர்கள் விழிப்புப் பெற்று, சமூக அநீதியை எதிர்த்து உரிமைக்குரல் எழுப்பி, விடுதலை பெற்ற மனித ஜீவன்களாகத் தம்மை வெளிப்படுத்திக் கொள்ளவேண்டிய கட்டாய நிலையை எதிர்கொண்டே தீரவேண்டும்.

சிப்பாய்க் கலகம் (1857) தொடங்கி, தேச விடுதலைப் போராட்டம் வலிமை அடைந்த (1920) காலத்துக்கு இடையில் இப்படிப்பட்ட எதிர்ப்புகள் தென்னகத்தில் நிகழ ஆரம்பித்துவிட்டன. இச்சமயத்தில் எழுந்த நாவல் இலக்கியம் இவற்றைப் பிரதிபலித்தன, முன்னேற்றத்தைத் தூண்டிவிட்டன. இவ்வகையில் தீர்மானமாகச் செயல்பட்ட எழுத்தாளர்களில் தமிழகத்தைப் பொறுத்தவரை பாரதி, அ. மாதவையா போன்றோர் மட்டுமே முதன்மை இடத்தில் வைத்துக் கொண்டாடத்தக்கவர்களாக விளங்குகிறார்கள்.

இந்தியாவின் முதல் நாவலாகப் போற்றப்படும் பங்கிம் சந்திரரின் 'துர்க்கேச நந்தினி' (வங்காளி/1865) போலவே, தமிழின் முதல் நாவலாகப் போற்றப்படும் வேதநாயகம் பிள்ளை (1826 - 1889)யின் 'பிரதாப முதலியார் சரித்திரம்' (1879), உண்மையில் 1857ஆம் ஆண்டிலேயே எழுதப்பட்டுவிட்டது என்கிறார்கள்.

பெண்களின் நிலையைச் சிறப்பாகப் படைத்துக் காட்டிய தென்னிந்திய நாவல்களாக ஒ.சந்துமேனன் (1847-1899) எழுதிய 'இந்துலேகா' (மலையாளம்/1889), குலவாடி வெங்கடராவ் (1844-1913) எழுதிய 'இந்திராபாய் அல்லது சட்தர்ம விஜயவு' (கன்னடம்/1899), அ. மாதவையாவின் 'முத்துமீனாட்சி' (ஒரு பிராமணப்பெண் சுவ சரிதை) (1904) ஆகிய மூன்றையும்தான் விமர்சகர்கள் முன்மொழிகிறார்கள்.

இவற்றில் இந்திய அளவில் சிறப்பு வாய்ந்ததாக 'முத்துமீனாட்சி' விளங்குகிறது என்பதும், அது 'சாவித்திரி சரித்திரம்' என்ற பெயரில் 1892ஆம் ஆண்டிலேயே வெளிவந்துவிட்டது என்பதும், அதனால் தமிழ் நாவல் வரலாற்றில் சிறப்புற்ற இரண்டாவது நாவலாகப் போற்றப்பட வேண்டியது என்பதும், தமிழின் முதல் சமூக நாவலும் சமூக சீர்திருத்த நாவலும் இதுதான் என்பதும், பிரச்சாரத் தொனி மிகுந்து இலக்கிய அழகியல் குறைவுபட்டுள்ளது என்று மாதவையாவின் புனைகதைகளுக்குக் கூறப்படும் வழக்கமான பல்லவி விமர்சனம் இந்நாவலுக்கு எடுபடாது என்பதையும்தான் இங்கு கவனத்தில் உறைக்கும்படி எடுத்துக்கூற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது.

கன்னி கழியாத விதவைப் பெண்களின் (பால்ய விவாகம்) விதவா விவாகத்தை ஏற்றுப் போற்றிய அன்றைய சீர்திருத்தவாதிகள் மத்தியில், முத்துமீனாட்சி போன்ற கன்னி கழிந்த விதவைகளின் விவாகம் பற்றி தைரியமாக மாதவையா பேசுகிறார். ஆண்தான் பெண்ணுக்கு சரிசமத்துவத்தை (பெயர் சொல்லிக் கணவனை அழைத்தல், கல்வி கற்பித்தல், குடும்பக் காரியங்களில் சமபங்கு வகித்தல், சம்பாத்தியம் முதலியவை) கற்பிப்பதாக, மாதவையா படைக்கும் ஆணாதிக்க மனப்பான்மைப் போக்கை பெண்ணிய ஆய்வாளர்கள் விமர்சித்தாலும், அன்றைய நடைமுறைச் சாத்தியத்தில் இதுவே புரட்சிகரமானது. இல்லாவிட்டால், நடைமுறையில் சாத்தியமற்ற அழகியல் குறைபாடுடைய கற்பனாபூர்வ லட்சியவாதச் சித்தரிப்பு என்று ஆகிவிடும். மாதவையாவின் சீர்திருத்தச் சித்தரிப்பைப் பிரச்சார இலக்கியமாக ஒதுக்குபவர்கள் கூறுவதைக் கவனத்தில் கொண்டால்தான் இந்த அவலம் புலப்படும்.

1890இல் வந்த இரண்டாம் பதிப்பில்தான் 'இந்துலேகா' நாவல் வெளித்தெரியவந்ததாம். நாயர் பெண்களின் நிலையைச் சித்தரித்த இந்த நாவலின் மூலப்பிரதி எடிட் செய்யப்பட்டே வெளிவந்ததாம். (குறிப்பாக அதன் கடைசி இருபதாவது அத்தியாயம் மிகவும் எடிட் செய்யப்பட்டுள்ளதாம். 1950க்குப் பிறகே இந்த நாவல் பொதுவெளியில் பிரபலமானது. 1913 வாக்கில் இது தமிழில் 'விவேகபோதினி' பத்திரிகையில் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்துள்ளதை ஆவணக் காப்பகத்தில் நான் காண முடிந்தது. அது புத்தகமாக வில்லை. கா. அப்பாதுரையும் இளம்பாரதியும் செய்த இரு மொழிபெயர்ப்புகள் இப்போது தமிழில் கிடைக்கிறது.

'இந்திராபாய்' எழுதிய குலவாடி வெங்கடராவ், சென்னையில் படித்தவர். போலீஸ் இன்ஸ்பெக்டராக பணிபுரிந்தவர். பஞ்ச கொளட பிராமணப் பிரிவில் ஒன்றான சரஸ்வதி பிரமண சாதியைச் சேந்தவர். முதல் கன்னட சமூக நாவல் இது.

வாய்மொழிக் கதை மரபிலிருந்து முற்றிலும் வேறுபட்டு, ஜேன் ஆஸ்டின், சார்லோட்டி பிராண்டி, ஆலிவர் கோல்டுஸ்மித், தாக்கரே, டிக்கன்ஸ் போன்றோரின் ஆங்கில நவீன நாவல்களின் தாக்கத்தோடு தமிழ்ச் சமூக வாழ்வையும் சமூக சீர்திருத்தத்தையும் கருக்களங்களாகக் கொண்டு ராஜமையர், மாதவையா ஆகியோரோடு பலரும் தோன்றுகிறார்கள். சரவணமுத்துப்பிள்ளை, குருசாமி சர்மா போன்றோர் தவிர இவர்களுள் பெரும்பாலானோர் அவ்வளவாக இலக்கியத் தகுதி இல்லாததால் மறக்கப்படுகிறார்கள். இவர்களை அன்றைய நாவல் இலக்கிய வடிவத்தின் காவியத்தன்மை கருதி, நவரச நாவலாசிரியர்களாகவே போற்றவேண்டும். ஜனரஞ்சகத் தன்மைதான் உலகத்து நாவலின் ஆரம்ப வடிவில் அதிகமிருந்தது என்பதுதான் இலக்கிய வரலாறு. இவர்களோடே வளர்ச்சிபெற்ற சுவாரஸ்யமானதும் மர்மங்கள் நிறைந்ததுமான (பின்பு வெகுஜன இலக்கியம் என வளர்ந்த) கதைப் போக்கு,

கானன்டாயில் பாணி துப்பறியும் நாவல்கள், ரெயினால்ட்ஸ் பாணி சாகச ரொமான்ஸ்கள், ஹோரஸ் வால்போல் பாணி கோதிக் நாவல்கள் பாணியைப் பின்பற்றி, முன்பே பண்டித நடேச சாஸ்திரி, பின்பு தி.ம. பொன்னுசாமி பிள்ளை போன்றவர்கள் தோன்றுகிறார்கள். இந்தக் காலத்து நாவல்களில் சமூக சீர்திருத்தமும் இலக்கிய அழகியலும் சுவாரஸ்யமும் கலந்துதான் காண முடியும். இவற்றில் எது தூக்கலாக இருக்கிறதோ அதை வைத்துத்தான் நாம் அந்த நாவலை மதிப்பிடுகிறோம், மதிக்கிறோம். இந்தச் சுவாரஸ்யத்தையும் ருசிகரத்தையும் முதன்மையாகக் கொண்டு ஏராளமான தழுவல் நாவல்கள் தமிழில் இறக்குமதியாயின. ஜே.ஆர். ரங்கராஜூ, வடுவூர் துரைசாமி ஐயங்கார், ஆரணி குப்புசாமி முதலியார் தொடங்கி, பின்பு கல்கி பாணியாக பத்திரிகைத் தொடர்கதைகளாக மாறி, சுஜாதா வரை இந்த வெகுஜன இலக்கிய மரபு வளர்ந்தது. பிரச்சார இலக்கியங்களை ஜனரஞ்சக இலக்கிய மரபில்தான் சேர்ப்பார்கள். இன்றைய நாவல்களோ தீவிர இலக்கிய மரபைச் சார்ந்ததாய் வளர்ந்து, அன்றைய காவிய, நவரச, வெகுஜன, ஜனரஞ்சக பாணிகளிலிருந்து எவ்வளவோ முன்னேறி, நுணுக்கமான சித்தரிப்புகளுக்கு நகர்ந்துவிட்டன.




மாயூரம் முன்சீப் சாமுவேல் வேதநாயகம் பிள்ளை (1826 - 1889)யிடம் வாய்மொழிக் கதைப் போக்கையும் நாட்டுப்புற, சுதேசித் தன்மையையும் அதிகம் உணரலாம். அவர் கிறிஸ்தவராக (என்றாலும் சர்வ சமய சமரசக் கீர்த்தனை பாடியவராக), வேளாளராக (ஒரு முதலியாரைக் கதைத் தலைவனாகக் கொண்டு), அரசாங்கத்தை அனுசரித்த உத்தியோகஸ்தராக (பெண் கல்வி போன்ற சமூக முன்னேற்றச் சீர்திருத்தங்களை ஏற்றுப் போற்றுபவராகவும்), தமிழ் மரபு இலக்கியத்தில் புலமையுள்ளவராக (ஆனாலும் நவீன வடிவைக் கண்டடைந்தவராக) மேலைக் கலாச்சாரத்தைக் கீழைக் கலாச்சாரத்தோடு இணைப்பவராக விளங்கியுள்ளார். அநுபவம் மிக்க அவரது முதிய காலத்தில்தான் அவரது முக்கியப் படைப்புகள் வெளிவந்திருக்கலாம்.

பி.ஆர். ராஜமையர் (1872-1898) தம் இருபது வயதில் இரண்டு ஆண்டுகளே ஆசிரியராக இருந்த ‘பிரபுத்த பாரதா’ (Prabudha Bharata) என்ற அத்வைத வேதாந்த பத்திரிகையில் ‘True greatness, or Vasudeva Sastri’ என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் ஒரு தமிழ் நாவலை 1896 - 98 வாக்கில் எழுதி வந்திருக்கிறார். அவரது இறப்பினால் அது முடிவு பெறாமல் போனது. அதை லண்டனில் உள்ள Allen and Unwin என்ற பிரபலமான பதிப்பகம் 1925ஆம் ஆண்டில் நூல் வடிவில் வெளியிட்டுள்ளது. பிரபுத்த பாரதத்தில் ராஜமையர் எழுதிய அனைத்தையும் Rambles in Vedanta. Madras: Thompson & Co., 1905 என்ற தலைப்பில் தொகுப்பாக அவரது மறைவுக்கும் பின்பு கொண்டுவந்தார்கள். அதில் இந்த ஆங்கில நாவல் சேர்க்கப்பட்டுள்ளது. அதன் இரண்டாம் பதிப்பும் சென்னையில் வெளிவந்தது.

இந்த நாவலுக்கு முன்பே ‘விவேகசிந்தாமணி’ மாசிகையில் தொடர்கதையாக (மாதவையாவின் ‘சாவித்திரி சரித்திரம்’ 1892இல் வந்து, பாதியில் நிறுத்தப்பட்ட பின் சில மாதங்கள் கழித்து) ராஜமையர் ‘கமலாம்பாள் சரித்திரம்’ நாவலை 1893இல் தொடராக எழுதி முடித்தார். பின்பு அது 1896ஆம் ஆண்டில் நூலாகப் பிரசுரமானது. அதன் சிறப்பான படைப்பாக்கம் கருதி அதைத் தமிழ் நாவல் வரலாற்றில் இரண்டாவது முக்கிய நாவலாகப் போற்றுகிறார்கள். எனவே, முன்னோடி நாவலாசிரியர்கள் வரிசையில் இரண்டாவதாக இடம்பெற்றுவிட்டார் ராஜமையர். அதற்குப்பின் வந்த நாவல்களில் சிறப்பானதாக மாதவையாவின் ‘பத்மாவதி சரித்திரம்’ (1898-99, இரு பாகங்கள்) அமைந்ததால் அந்த நாவலுக்கும் நாவலாசிரியருக்கும் தமிழில் மூன்றாம் இடத்தைத் தந்தார்கள். ‘பத்மாவதி சரித்திரம்’ பிரசுரத்துக்குப் பின்பு 1903இல் ‘முத்துமீனாட்சி’ வெளிவந்ததன் தொடர்ச்சியாகத்தான் பத்திரிகைகளிலும் தனித்தும் மாதவையா எழுதிய படைப்புகள் நூலுருப் பெறத் தொடங்குகின்றன என்பதையும் இங்கு சுட்டிக்காட்டலாம். ‘முத்துமீனாட்சி’ நாவலின் இரண்டாம் பதிப்பு இருபத்தியொரு ஆண்டுகளுக்குப் பின் 1924இல் வெளிவந்த பின்பே அது பரவலாக வாசகர் கவனத்தைப் பெற்றது என்பதையும் தனித்துக் குறிப்பிடவேண்டும்.

ராஜமையரோ மிக இளமையிலேயே, இருபது வயது அளவிலேயே, மிகச் சிறப்பாகப் படைத்து இருபத்தாறு வயதளவில் மறைந்தவர். வேதாந்தத்தில் அவருக்குள்ள புலமை கருதி விவேகானந்தரால் ‘பிரபுத்த பாரதம்’ பத்திரிகையின் ஆசிரியராக்கப்பட்டவர்.

பிராமண குலத்தவர். அவரது குறையாக வந்த ஆங்கில நாவலில் உள்ள தத்துவவிசாரத்தைவிட 'கமலாம்பாள் சரித்திர'த்தில் அந்த விசாரம் (நாவலின் பின்பகுதியைவிட முன்பகுதியில்) இலக்கிய அழகியலோடு பின்னிப் பிணைந்துவிட்டது என்பார்கள். தம் நாவலைப் பற்றி இவ்வாறுதான் அவர் கூறியுள்ளார்:

> "இச் சரித்திரம் எழுதுவதில் எனக்கு கதையே முக்கிய கருத்தன்று. மற்றென்னையோ வெனில், பகவானது மாயா விபூதியாம் பெருங்கடலினுள் ஓர் அலையுள், ஓர் நுரையுள், ஓர் அணுவை யானெடுத்து, அதனுள் என் புல்லறிவுக் கெட்டிய மட்டும் புகுந்து பார்த்து, தூண் பிளந்து தோன்றிய அவனே அங்கும் இருக்கக் கண்டு கைகூப்பி ஆடிப் பாடி, அரற்றி, உலகெல்லாம் துள்ளித் துதைத்த இளஞ்சேயொப்ப யாரும் ஆடிப் பாடி ஓடவேண்டுமென்பதே யன்றி வேறன்று. இவ்வுலகில் உழன்று தவிக்கும் ஒரு அமைதியற்ற ஆத்மா பல கஷ்ட நஷ்டங்களை அனுபவித்து கடைசியாக நிர்மூலமான ஓர் இன்ப நிலை அடைந்ததை விவரிப்பதே இந்த நவீனத்தின் முக்கிய நோக்கம்' (கமலாம்பாள் சரித்திரம் முன்னுரை).

1893 பிப்ரவரி 'விவேகசிந்தாமணி' மாசிகையில் இந்த நாவல் தொடராக வெளிவரலாயிற்று. முதல் இரண்டு இதழ்களில் இந் நாவல் 'அநியாய அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்' என்ற தலைப்பிலும், மூன்றாவது இதழில் இருந்து 'ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்' என்னும் தலைப்பிலும் தொடர்ந்து வெளிவந்து 1895 ஜனவரியில் நிறைவுபெற்றது. விவேக சிந்தாமணியில் இக்கதை வெளிவந்தபோது பி.ஆர். சிவசுப்பிரமணிய ஐயர் என்ற பெயரிலேயே எழுதினார். தாக்கரே, கோல்டுஸ்மித் போன்ற ஆங்கில நாவலாசிரியர்களின் தாக்கத்தை அவரிடம் காண முடியும்.

முன்னோடித் தமிழ் நாவலாசிரியர்களில் அ. மாதவையா (1871 - 1925) மூன்றாம் இடத்தில் வைக்கப்பட்டதற்கு, முதலில் தோன்றிய சிறப்பான தமிழ் நாவல்களில் மூன்றாம் இடம் அளிக்கப்பட்டுள்ள 'பத்மாவதி சரித்திரம்' என்ற நாவலின் ஆசிரியர் என்பதே காரணம். இவரும் இருபது வயதிலேயே எழுத ஆரம்பித்தவர். அத்தோடு அவர் ஒரு சீர்திருத்தவாதியாகவும் பிரச்சாரம் மிகுந்த இலக்கியத்தைப் படைத்த முன்னோடியாகவும் சாதி உயர்வு தாழ்வையும் அதன் சடங்கு சம்பிரதாயங்களை ஏற்காதவராயும் மனித வாழ்வில் மதத்தின் குறுக்கீட்டை மறுக்கும் பகுத்தறிவுவாதியாகவும் முற்போக்குவாதியாகவும் கருதப்பட்டவர். இவற்றையெல்லாம் மீறிய அவரது இலக்கிய சாதனைகளின் முழுமையும் மேதமையும் வெளித்தெரியவர விடாமலேயே அடக்கி வாசிக்கப்படுகிறார்.

அவரே நவீன தமிழ்ச் சிறுகதைகளை முதலில் எழுதியவர். ஆனால், அவை ஆங்கிலத்தில் வெளிவந்து பின்பே தமிழில் தெரிய வந்தன. 'குசிகா' (Kusika) என்ற (கௌசிகா என்பதன் மரூ) புனைப்பெயரின் கீழ் ஆங்கிலத்தில் 'ஹிந்து' பத்திரிகையில் வாரம் ஒரு சிறுகதையாக 27 சிறுகதைகள், 1910இல் தோன்றின. வாசகர்களிடம் நல்ல வரவேற்பு இருந்ததால், இக் கதைகளை 2 பாகமாகத் தொகுத்து 'ஹிந்து' பத்திரிகையே வெளியிட்டது. தமது சொந்தப் பதிப்பகத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து 1924இல், தாம் இறப்பதற்கு முந்திய ஆண்டில், ஆங்கிலத்தில் இரு தொகுதிகளையும் மறுபிரசுரமாக வெளியிட்டு, இவைகளில் 22 கதைகளைத் தமிழாக்கம் செய்து, 'குசிகர் குட்டிக் கதைகள்' என்ற தலைப்புடன் 3 பாகங்களாக மாதவையா வெளியிட்டார். சமூகச் சீர்திருத்த நோக்குடன் இக்கதைகளைப் படைத்ததாக மாதவையா முன்னுரையில் குறிப் பிட்டுள்ளார். இதில் இடம் பெற்ற 'திரௌபதி கனவு', குழந்தை மணத்தையும் கைம்பெண் கொடுமையையும், 'அவனாலான பரிகாரம்' என்ற கதை வரதட்சணைக் கொடுமையையும் பேசியுள்ளன. மாதவையா, தாம் ஆசிரியராக இருந்து வெளியிட்ட 'பஞ் சாமிர்தம்' இதழிலும் 'கண்ணன் பெருந்தூது' முதலிய நான்கு சிறுகதைகளை எழுதியுள்ளார். 'தமிழ்நேசன்' இதழில் ஒரு சிறுகதையும் குழந்தைக்கான கதைகளும் எழுதியுள்ளார்.

வேதநாயகம் பிள்ளையின் 'பிரதாப முதலியார் சரித்திரம்' (1879) என்ற அற்புத நவிற்சி நாவலுக்குப் பின் இரண்டாவதாக எழுதப்பட்ட நவீன சமூக நாவலைத் தமிழில் முதன் முதலில் எழுதியவர் மாதவையாதான். அது 'சாவித்திரி சரித்திரம்' (1892) என்ற பெயரில், 'விவேகசிந்தாமணி' மாசிகைப் பத்திரிகையில், தமிழின் முதல் பத்திரிகைத் தொடர்கதையாக, இரண்டாம் இதழ் (ஜூன் 1892) தொடங்கி, ஏழாம் இதழ் (நவம்பர் 1892) வரை ஆறு அதிகாரங்கள் (ஒருமாதம் மட்டும் இடைவிட்டு) வெளிவந்து, பத்திரிகை ஆசிரியர் குழுவாலோ வாசகர்களாலோ சாதிப்பற்றாளர்களாலோ அதன் சீர்திருத்தக் கருத்துகளைத் தாங்க முடியாமல் போய் பாதியில் நிறுத்தப்பட்டது. அது முழுமை பெற்று நூலாகவும் வெளிவந்திருந்தால் தமிழின் இரண்டாவது நாவல், தமிழின் முதல் சமூக நாவலாக இலக்கிய வரலாற்றில் இடம் பெற்றிருக்கும்.

அவருக்கு 'பத்மாவதி சரித்திரம்' (1898 - 99) மூலம் பிரபலம் கிடைத்த பின்பே, இந்த 'சாவித்திரி சரித்திரம்' நாவலை, பத்து ஆண்டுகள் கழித்து, பெயர்களையும் இடங்களையும் மட்டும் மாற்றம் செய்தும் சில வரிகளைக் கூர்மைப்படுத்தியும் 'முத்துமீனாட்சி' (1903) என்ற பெயரில் முழுமையான புத்தகமாக வெளியிடுகிறார். ஆனால், அதை அவர் பத்திரிகைத் தொடராக வந்த அப்போதே முழுமையாக எழுதி முடித்து வைத்திருந்திருக்கலாம் என்றே படுகிறது.

அவர் பெயர் தமிழ் இலக்கிய உலகத்தில் ஒதுக்கப்பட்டு அல்லது ஓரங்கட்டப்பட்டு, மறக்கப்பட்டு அல்லது மறைக்கப்பட்டு விட்ட இக்காலத்தில், அவருடைய முக்கியப் படைப்புக்களை அவருடைய முதன்மையையும் மேதைமையையும் வெளிப்படுத்த வாசகர் முன் வைக்க வேண்டும் என்ற நோக்கில் அவரது சில நூல்கள் மீண்டும் பிரசுரிக்கப்பட உள்ளன. அதில் முக்கியமானது இந்த 'முத்து மீனாட்சி'. அந்த முந்திய மறக்கப்பட்ட ஆறு அத்தியாயங்களுடன், அவையேதான் பின்பு மிகச் சில மாற்றங்களுடன் வெளிவந்திருப்பது அறிந்தும் கூறியது கூறலாகப் போகும் என்று தெரிந்தும், வரலாற்று




நோக்கம் கருதி, மீண்டும் முன்னவற்றையும் சேர்த்து இங்கு பிரசுரம் செய்யப் பெறுகிறது.

அப்பாவையா (அநந்தநாராயணய்யர்), மாதவையா (1871-1925), திருநெல்வேலி மாவட்டத்தில் இருந்த பெருங்குளம் என்ற ஊரில் 1871ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 16ஆம் தேதி பிறந்தார். தமிழகத்தில் வாழும் அய்யர், அய்யங்கார் என்று அழைக்கப்படும் தமிழ்ப் பிராமணர்களைப் போலவோ கன்னடப் பிராமணர்களைப் போலவோ இல்லாமல், அவர் தெலுங்கு பிராமணர் குலத்தில் பிறந்து, பிற்காலத்தில் தமிழகத்தில் குடியேறிய வடமர் வகுப்பைச் சார்ந்தவர். கௌசிக கோத்ரம் (குசிகர் என்ற புனைபெயருக்கு இது காரணம். பெருங்குளம் அப்பாவையர் மாதவையர், பி.ஏ. என்பதன் சுருக்கமாக Pamba என்ற புனைபெயரை ஆங்கிலத்தில் பயன்படுத்தினார்). பள்ளிப் படிப்பை திருநெல்வேலியில் முடித்துவிட்டு, மேல் படிப்புக்காக சென்னை கிறிஸ்துவ கல்லூரியில் சேர்ந்து, பி.ஏ. தேர்வில் சிறப்புடன் தேறினார். பிறகு எம்.ஏ. பட்டத்திற்கு படித்தவாறே, கிறிஸ்துவக் கல்லூரியில் ஓர் ஆண்டு உபாத்தியாயராக வேலை பார்த்தார். எம்.ஏ. பட்டப் படிப்பு முடியும் முன், அரசாங்க உப்புசுங்கத் துறைக்கான அரசுப் போட்டித் தேர்வில் முதன்மையாகத் தேறி, அந்த இலாகாவில் இன்ஸ்பெக்டராக வேலையில் அமர்ந்தார்.

வேலை நிமித்தமாக மாதவையா உப்புக் களங்களுள்ள சிற்றூர்களிலும் கானகங்கள் சூழ்ந்த கிராமங்களிலும் வாழ நேர்ந்தது. இவ்விடங்களில் ஓய்வு நேரத்தில், கெரசின் விளக்கின் ஒளியில், தமிழிலும் ஆங்கிலத்திலும் பல படைப்புகளை மாதவையா எழுதியுள்ளார். நாவல் தவிர சிறுகதை, நாடகம், கட்டுரை, கவிதை (மரபுக் கவிதையும் கும்மிப் பாட்டும்), மொழிபெயர்ப்பு, வரலாறு, இலக்கிய விமர்சனம், குழந்தை இலக்கியம் போன்ற பல இலக்கிய வடிவங்களை மாதவையா கையாண்டுள்ளார். ஒவ்வொன்றையும் சிறப்பாகவே தேர்ந்தெடுத்துப் படைத்துள்ளார். மாதவையாவின் படைப்புகளின் விரிவான களங்களும் திறமையும் பிரமிப்பை அளிக்கக் கூடியவை. அக்காலத்தில் பல பத்திரிகைகளில் அவரது எழுத்துக்கள் வெளிவந்துள்ளன.

முதலில் 'தமிழர் நேசன்' என்ற பத்திரிகையில் ஓய்வு நேரத்தில் பத்திராதிபராக வேலை செய்த மாதவையா, விருப்ப ஓய்வு பெற்று, பின் சொந்தமாக ஒரு பிரசுராலயம் ஏற்படுத்தி, 'பஞ்சாமிர்தம்' என்ற பத்திரிகையையும் வெளியிட்டார். இந்தப் பத்திரிகையை வளர்ப்பதில் அவர் கடைசி நாட்களில் கவனமாக இருந்தார். 1925 அக்டோபர் 22ஆம் தேதியன்று தாம் அங்கத்தினராக இருந்த சென்னை பல்கலைக்கழகப் பேரவையில், பட்டப்படிப்பில் தமிழ் கட்டாயப் பாடமாக இருக்க வேண்டும் என்பதைக் கூட்டத்தில் விளக்கிப் பேசிய பின் அமர்ந்தவரின் உயிர் அப்படியே பிரிந்துவிட்டது.

மிக இளம் வயதிலிருந்தே இலக்கியத்தில் ஆழ்ந்த ஈடுபாடுடைய மாதவையா, அதைப் படிப்பதில் மட்டுமல்லாமல், எழுதுவதிலும் ஆர்வம் கொண்டார். அவருடைய முதல் படைப்பு, சுந்தரம் பிள்ளையின் மனோன்மணீயம் நாடகம் பற்றிய அறிமுக மதிப்புரை. 1892இல் 'விவேக சிந்தாமணி' எனும் பத்திரிகையில் நான்கு இதழ்களில் இது வெளிவந்தது. அதே வருடம், அதே பத்திரிகையில், அதே இதழ்களில் அவரது 'சாவித்திரி சரித்திரம்' என்ற தொடர் நாவலும் வெளிவரலாயிற்று. கட்டுரைகளுக்கு அ.மாதவையர் என்ற இயற்பெயரையும் தொடர்கதைக்கு 'சாவித்திரி' என்ற புனைபெயரையும் பயன்படுத்தினார். ஆனால், ஆறு இதழ்களில் வந்த ஆறு அதிகாரங்களுக்குப் பின் 'சாவித்திரி சரித்திரம்' நிறுத்தப்பட்டுவிட்டது. 'விவேக சிந்தாமணி' மாசிகையின் நிர்வாகக் குழுவில் ஒருவராகவோ அல்லது அதன் ஆசிரியரின் நெருங்கிய நண்பராகவோ இருந்ததால்தான், அப்பத்திரிகை தொடங்கப்பட்டதும் இரண்டாம் இதழில் இருந்து மாதவையா அதற்குக் கட்டுரைகளையும் தொடர்கதையையும் எழுதியுள்ளார். கதையில் தொனித்த தீவிரமான சீர்திருத்தக் கருத்துகளுக்காக அது ஆசிரியராலோ நிர்வாகக் குழுவாலோ வாசகர்களின் எதிர்ப்பாலோ சொல்லாமல் கொள்ளாமல் நிறுத்தப்பட்டிருக்கிறது. எனவே, தொடர்ந்து மாதவையா அப்பத்திரிகையில் வேறு எதுவும் எழுதவில்லை. 'சாவித்திரி சரித்திரம்' வெளியான பிறகுதான், தமிழில் முதலில் வெளிவந்த சிறந்த இரண்டாவது நாவல் என்று நிர்ணயிக்கப்பட்ட

நூலான ராஜமையர் எழுதிய 'கமலாம்பாள் சரித்திரம்', அதே 'விவேக சிந்தாமணி' பத்திரிகையில் தொடராக ஆரம்பித்தது. நின்று போன "சாவித்திரி சரித்திரம்' 1903ல் சில மாற்றங்களுடன் 'முத்து மீனாக்ஷி' என்ற பெயரில் நூலாகப் பிரசுரிக்கப்பட்டது. 1898இல் 'பத்மாவதி சரித்திரம்' முதல் பாகமும் அதற்கு அடுத்த வருடம் இரண்டாம் பாகமும் வெளிவந்தன. அப்பொழுது ஆசிரியரின் வயது 26 - 27தான் இருக்கும் என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

'முத்து மீனாட்சி'யின் முதல் பதிப்பு பார்க்கக் கிடைக்காத நிலையில், திருத்திய இரண்டாம் பதிப்பைத்தான் இன்று நமக்குக் காணக் கிடைக்கிறது. இதைத் தனது ஆசிரியர் அச்சுப் பிரசுராலயம் புஸ்தகசாலை வழியாக 1924இல் கொண்டுவந்தார்.

'செந்தமிழ் நாவல்கள்: 3. முத்து மீனாக்ஷி (ஒரு பிராமணப்பெண் சுவசரிதை)' என்ற தலைப்பில் இது வெளிவந்திருக்கிறது. தலைப்பின் கீழ் இச்சிந்தியல் வெண்பாச் செய்யுள் இடம் பெற்றுள்ளது.

*தொன்முறை மாறித் துலங்கும் புதுமுறை;*
*நன்முறை ஒன்றினே ஞாலம் அழுங்காமே*
*பன்முறையின் ஆளும் பரன்.*

இதன் கீழே,

*இது 'பத்மாவதி சரித்திரம்', 'விஜய மார்த்தாண்டம்', 'குசிகர் குட்டிக்கதைகள்', 'உதயலன்', 'திருமலை சேதுபதி', 'சித்தார்த்தன்', 'புத்தசரிதை', 'பால ராமாயணம்', 'பாலவிநோதக் கதைகள்', 'பொதுதர்ம சத்மஞ் சரி', 'புதுமாதிரிக் கல்யாணப்பாட்டு', 'ஆசார சீர்திருத்தம்', 'பாரிஸ்டர் பஞ்சநதம்', 'தில்லைக் கோவிந்தன்' முதலிய பல பிரபலமான நூல்களின் ஆசிரியரும் 'பஞ்சாமிர்தம்' பத்திராதிபருமான மாதவையர் இயற்றியது*

என்று பிரதாபிக்கப்பட்டுள்ளது. எனவே, இந்நூல் வெளிவரும்போது அவரது இவ்வளவு படைப்புகள் அச்சில் பிரசுரம் பெற்றிருக்கின்றன என்பதை அறிகிறோம்.

எனவே 1903இல் முதல் பதிப்பாகவும் 1924இல் திருத்திய இரண்டாம் பதிப்பாகவும் வெளிவந்தது அ.மாதவையாவின் 'முத்துமீனாட்சி' என்ற 'சாவித்திரி சரித்திரம்' என்ற சமூக நாவல். இந்த 1924ஆம் ஆண்டுப் பதிப்புக்குப் பின்பே இந்த நாவல் பரவலான வாசகக் கவனத்தைப் பெற்றிருக்கிறது. எனவே, சாவித்திரி சரித்திரத்தின் நினைவு மறந்தே போனதில் ஆச்சரியமில்லை.

மாதவையாவின் பெயர் பற்றி ஒரு பிரச்சனையைக் கிளப்பினார் ஆய்வாளர் வேதசகாயகுமார். அவருடைய முற்கால நூல்களில் 'மாதவையர்' என்றும் பிற்கால எழுத்துகள் சிலவற்றில் மட்டும் 'மாதவையா' என்றும் காணப்படுகிறது. இப்பெயர் பிரச்சனை குறித்து மாதவையாவின் மகன் மா.கிருஷ்ணன் விளக்கம் கொடுத்திருக்கிறார்:

*....பரம்பரையாக 'ஐயர்' என்ற பெயர் முடிவுள்ள வம்சத்தில் பிறந்து, தமது தாய் மொழியாகிய தமிழில் அளவில்லாத வாஞ் சையும் பெருமையும் கொண்டிருந்தும், திருநெல்வேலியில் குடியேறிய ஒரு தெலுங்கக் குடும்பத்தாரின் சமீப நட்பால், இளம் பிராயத்திலேயே தமது பெயரை 'மாதவையா' என்று மாற்றிக் கொண்டுவிட்டார். அவர் எழுதிய பல தமிழ் புத்தகங்கள், கட்டுரைகளின் தலைப்பில் 'மாதவையர்' என்ற பெயரே காணப்படினும், எல்லா சமயங்களையும் வகுப்புகளையும் சார்ந்த அநேக நண்பர்களாலும் அழைக்கப்பட்டபடி, 'மாதவையா' என்ற பெயரைக் கொண்டே அவரை இங்கு குறிப்பிடுகிறேன். ( 'ஆசிரியர் சரிதை', பத்மாவதி சரித்திரம், தி லிட்டில் ஃப்ளவர் கம்பெனி பதிப்பு.)*

எனவே, மாதவையாவின் மேதைமையான காரியங்களுக்கு மதிப்பளித்துப் பெருமைப்படுத்தும் வகையில் அவரை இப்பெயரிலேயே அழைப்பதுதான் நமது கடமை.

நெல்லையிலும் கிறிஸ்தவக் கல்லூரியிலும் அவருக்கு புராட்டஸ்டண்ட் கிறிஸ்தவர்களோடும் மிசனரி சார்ந்தவர்களோடும் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிடைத்தது. அவர்கள் மூலம் தமது ஆங்கில நூல்களை ஆங்கில தேசத்தில் வெளியிடவும் பரவலாக்கவும் முயன்றதுண்டு. அவரது 'கிளாரிந்தா', 'சத்தியானந்தன்' ஆகிய ஆங்கில நாவல்களில் வரும் கிறிஸ்தவ மதச் சார்பை வைத்து அவரை கிறிஸ்தவ மத மாற்றத்தை ஆதரிப்பவராகச் சிலர் குறை கூறுவதும் உண்டு. ஆனால், தமது ஆரம்ப காலப்படைப்புகளில் தமது இனத்தையும் தேசத்தையும் முன்னேற்றுவதற்குத் தேவையானவற்றை, ஆங்கிலக் கலாச்சாரத்திலிருந்தும் கிறிஸ்தவ சீர்திருத்தக் கருத்துகளிலிருந்தும் நாஸ்திக இயக்கத்திலிருந்தும் பெற வேண்டும் என்று வலியுறுத்திய அவர், பிற்காலப் படைப்புகளில் மேலைக் கலாச்சாரத்தையும் மிசனரிகளின் செயல்பாட்டையும் நாஸ்திகவாதத்தையும் விமர்சிக்கும் போக்கைப் பார்க்க முடியும்.

மாதவையா அரசாங்க வேலையில் இருந்ததால் தேசீய இயக்கங்களில் நேரிடையாகக் கலந்துகொள்ளவில்லையே தவிர அப்போதே தேசீயக் கீதங்களை எழுதி வெளியிட்டும் உள்ளார். ஒரு தேசீய கீதப் போட்டியில் அவரது பாட்டுக்கு முதல் பரிசும் பாரதி பாட்டுக்கு அடுத்த பரிசும் கிடைத்ததையும் இங்கு நினைவு கொள்ளலாம் ( ஆனால், பாரதி பாடல் இன்றும் வாழ்கிறது, மாதவையா பாடல் மறக்கப்பட்டுவிட்டது என்பது வேறொரு விஷயம்).

அரசாங்க வேலையிலிருந்து கொண்டு அரசை எதிர்கொள்வதில் உள்ள சிக்கலைத் தீர்க்கவே, விரைவில் உத்தியோகத்திலிருந்து விருப்ப ஓய்வை பெற்று தன் இஷ்டம் போல் எழுதவும் பத்திரிகை நடத்தவும் வழிவகுத்துக் கொண்டார். (மாதவையாவின் 'தில்லைக்கோவிந்தன்' ஆங்கில நாவலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்ட அவரது மூத்த சகோதரன் வழிப் பேரனான வே. நாராயணன், அதன் பதினாறாவது அத்தியாயத்தை ('எனது ராஜீயக் கொள்கைகளைக் குறித்தது')மட்டும் மொழிபெயர்க்காமல் விட்டிருக்கிறார். ஏதும் அரசை ஆதரித்து எழுதியிருப்பாரோ என்று அதை ஆங்கில நூலில் தேடிப் படித்தேன். அப்படி



யில்லை. அதில் பிற்காலத்தில் அவர் மாறுபட்ட மத விஷயங்களே இருந்தன.)

அவரது குழந்தைகள் முற்போக்கோடு வளர்க்கப்பட்டார்கள். எல்லோரும் எழுத்தாளர்களாகவும் வளர்ந்தார்கள். 'காசினி' என்ற பெயரில் பல்வேறு விஷயதானங்களைப் பத்திரிகைக்கு அளித்துப் பெண் எழுத்தாளர்களுள் சிறப்பிடம் பெற்ற வி(ஸ்வநாதன்) விசாலாட்சி அம்மாள் இதில் முக்கியமானவர் (இவரது 'மூன்றில் எது?' என்ற பஞ்சாமிர்தம் இதழ் சிறுகதை, புதுமைப்பித்தனால் பாராட்டப்பட்டது என்று நினைவு. இவரை முதல் பெண் நாவலாசிரியரான பண்டிதை விசாலாட்சி அம்மாளோடு குழப்பிக்கொள்வார்கள். சக்தி கோவிந்தனின் 'மங்கை' இதழுக்கு ஆசிரியராக இருந்த விசாலாட்சியும்கூட இவராக இருக்கலாம். உறுதியாக எனக்குத் தெரியவில்லை). கானுயிர் ஆர்வலர் மா.கிருஷ்ணன் என்ற மகன் பிரபலமானவர். (அறிவியல் தமிழை வளர்த்த சகோதரர் மகனான பெ.நா. அப்புஸ்வாமியை அனைவரும் அறிவோம்.) மாதவையாவின் குடும்பத்தினர் சேர்ந்து எழுதிய கதைகளை, பி.ஸ்ரீ.யைப் பதிப்பாசிரியராகக் கொண்டிருந்த தினமணி பிரசுராலயம் 'முன்னிலா' என்ற தொகுப்பாகக் கொண்டு வந்திருக்கிறது.

சாவித்திரி என்ற புராண காலப் பெயரைத் தம் நாவலுக்கு முதலில் குறியீடாகச் சூட்டியிருக்கிறார் மாதவையா. தாய் மீனாட்சி, இளம்வயதிலேயே மறைந்த சகோதரி முத்துலட்சுமி (1860-76), மகள் முத்துலட்சுமி இவற்றை இணைத்து முத்துலட்சுமி என்ற பெயரை நாவலுக்குச் சூட்டினாரா தெரியவில்லை. சாவித்திரி சரித்திரத்தில் உள்ள பெயர்கள் பலவற்றையும் இடங்களின் சில பெயர்களையும் முத்துமீனாட்சியில் மாற்றியுள்ளார். ஒருசில பெயர்கள் அப்படியேயுள்ளன. செங்கமலம் என்ற அழகான பெயரை மட்டும் குட்டியம்மாள் என்று குணதோஷப் பெயராக்கியிருக்கிறார். பெரும்பாலும் சைவப்பெயர்கள் வைணவப் பெயர்களாக்கப்பட்டுள்ளன.

*சாவித்திரி - முத்துமீனாட்சி*
*செங்கமலம் - குட்டியம்மாள்*
*இலட்சுமியம்மாள் - பார்வதியம்மாள்*
*சேஷி நாணி - சங்கரி சங்கரி*
*விசாலாட்சி - விசாலாட்சி*
*காமாட்சி - காமாட்சி*
*இலட்சுமி - இலட்சுமி*
*நடேசன் - சுந்தரேசன்*
*கோபாலன் - சுப்பிரமணியன்*
*கிருஷ்ணன் - இராமன்*
*சுப்பையர் - சங்கரையர்*
*சுந்தர சாஸ்திரி - இராமபத்ர சாஸ்திரி*
*சுந்தரமையர் - சுந்தரமையர்*
*கோவிந்தப்பபுரம் - இராமாபுரம்*

இந்த மாற்றங்கள் தவிர, ஒருசில சொற்களையும் வாக்கியங்களையும் செம்மைப்படுத்தியதைத் தவிர, பெரிதாக மாற்றங்கள் ஏதுமில்லை என்பதை ஒப்பிட்டு அறியலாம்.

கதையின் சமூகச் சீர்திருத்தக் கருத்துச் செறிவும் புதுவகையான நவீன கதையாடலும் அக்கால வாசகர்களாலும் பத்திரிகைகளாலும் செரிக்க முடியாத காரணத்தால், தொடக்கத்தில் இந்நாவலுக்கு எதிர்ப்பும் தோன்றியிருக்கிறது. இந்த உண்மையை, நாவலின் ஆசிரியரே, தமது இந்த நாவலின் மறுபதிப்பு முகவுரையில் சுட்டிக் காட்டியுள்ளார்:

*இந்த நாவல் 21 ஆண்டுகளுக்கு முன், முதலில் வெளிவந்த பொழுது, இதன் கொள்கைகளையும் வாழ்க்கைக் குறிக்கோளையும் 'ஹிந்து' பத்திரிகை பழித்துக் கண்டித்தெழுதியது. பின்பு பத்து வருஷங்களுக்குள் அந்தக் கோட்பாடுகளின் விருத்தியுரை என்னலாகும் குசிகர் குட்டிக் கதைகளை, அதே பத்திரிகை தானே பிரசுரித்தது மன்றி, புஸ்தக ரூபமாகவும் திரட்டி வெளியிட்டு நாடெங்கும் பரவச் செய்தது. சிலவாண்டுகளுக்குள் நம்மவர் அபிப்பிராயங்கள் எவ்வளவு திருந்தி முன் வந்திருக்கின்றன என்பதற்கு இதுவே தக்க சான்றாகும். (மாதவையா, 1924)*

பிந்திவந்த காலகட்டத்தில்கூட சிந்திப்பதற்கும் எழுதுவதற்கும் பயப்படும் தீவிர சமுதாயக் கருத்துக்களை அந்தக் காலத்து ஓரிரு நாவலாசிரியர்கள் மிகுந்த எச்சரிக்கையுடனும் ஜாக்கிரதை உணர்வுடனும்தான் எழுதிப் பார்த்திருக்கிறார்கள். இவர்களிலிருந்த மாறுபட்டவர் மாதவையா.

சமுதாயத்தில் புரையோடி இருக்கும் சில சமத்துவமற்ற வெறும் நம்பிக்கை சார்ந்த தீய மூடப் பழக்கவழக்கங்களைக் கண்டிப்பதும் பேசுவதும் இன்று ஒரு மோஸ்தராகவே கருதப்படுகிறது. ஆனால், அந்தக் காலத்தில் அந்தரங்க சுத்தியுடன் சமூக சீர்திருத்தப் பணிகளில் ஈடுபட்ட சிலரில் ஒருவர் மாதவையா. அதுவும் படைப்பாளியாக இவர் தனித்துத் தெரிகிறார். இவர் தாம் எழுதிய புனைகதைகள் மூலம் சமுதாய சீர்திருத்தத்தை முன்னறிவிக்க விரும்பினார்; சமூகப் பழக்க வழக்கங்களிலும் நடைமுறைகளிலும், திட்டமிட்டும் திட்டமற்றும், அறிந்தும் அறியாமலும் புகுந்துவிட்ட சில காலத்துக்கு ஏற்காத சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் தமது விமர்சனபூர்வமான கதைகளால் எடுத்துக்காட்டினார். அதனால், இலக்கியத்துவம் குறைவுபட்டு பிரசாரம் மிகுபடுவதையும் பற்றிக் கவலைப்படவில்லை. மாயூரம் வேதநாயகம் போல தம் கருத்துக்களை அற்புத நவிற்சி தோன்றப் படைக்க நினைக்கவில்லை. பின்வந்த ராஜமையர் போல இலக்கியத்துவத்துக்கு முக்கியம் தந்து தமது வேதாந்தக் கருத்துக்களைத் தந்தது போல் தரவும் நினைக்கவில்லை. அல்லது பண்டித நடேசசாஸ்திரி போலவும் தி.ம. பொன்னுச்சாமி போலவும் சுவாரஸ்யமான சம்பவங்களுக்கும் சஸ்பென்சுக்கும் முக்கியத்துவம் தந்து ருசிகரம் நிறைந்த பொழுதுபோக்குப் புனைகதைகள் எழுத நினைக்கவில்லை. அன்றைய சிறந்த தமிழ் அறிஞர்கள், கல்வியில் சிறந்த பண்டிதர்கள் ரெயினால்ஸ் பாணிக் கதைகளையே சுயமாகவும் தழுவியும் எழுதியதையும் கைக்கொள்ளவில்லை. இவர்களிடமிருந்து மாறுபட்டு தாக்கரே, கோல்டுஸ்மித், டிக்கன்ஸ் பாணிக் கதைகளைத்தான் மாதவையா தர நினைத்தார் என்றும் சொல்லலாம். ஆனால், முற்றிலும் இலக்கியத்துவத்துடன் டிக்கன்ஸ் தன் பிரச்சாரத்தை ஆழப் புதைத்து எழுதினார். மாதவையாவிடம் அது வெளிப்படையாகவே தெரிகிறது. மற்றவர்கள் யாரும், அன்று மிகுந்த தாக்கத்தைச் செலுத்திய முன் நவீனத்துவவாதிகளான தாக்கரே, டிக்கன்ஸ் பாதிப்பைத் தமிழில் காட்டவில்லை என்றே சொல்லலாம். பாரதி, செல்வகேசவராயர், ராஜமையர் என்ற விதி விலக்குகள் உண்டு. இவர்களில் மாதவையா முன்னேறித் தாக்கும் முன்னணிப் படைவீரராக விளங்கினார்.

சாதி, மதம் பற்றி முற்றாக எதிர்க் கருத்துகளைக் கொண்டிருந்தார் மாதவையா என்று தெரிகிறது. கிறிஸ்தவ மதமாற்றம் பெற்ற பாத்திரங்களைக் கொண்ட 'சத்தியானந்தன்', 'கிளாரிந்தா' என்ற ஆங்கில நாவல்கள் கிறிஸ்தவ இலக்கிய அமைப்பால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுப் பரவலாக்கப்பட்ட போதும்கூட, அவரது நாத்திகச் சார்பே துலக்கமாக வெளிப்படுகிறது. பெண் கல்வி, இளம் விதவைகள் மறுமணம் போன்றவை சாத்திர விரோதம், நடைமுறைக்கு ஒவ்வாதவை என்று கருதப்பட்ட காலத்தில் எழுதப்பட்டது மிக முன்னோடி நாவலான 'சாவித்திரி சரித்திரம்' என்ற 'முத்துமீனாட்சி'. அந்தக் காலத்து நடைமுறைகளையும் சமூக நிலைகளையும் பிரதிபலிப்பதோடு அல்லாமல் விமர்சித்தும் எழுதப்பட்டது.

'முத்துமீனாட்சி'. ஒரு பிராமணப் பெண்ணின் சுவசரிதை எனினும் உயர்ந்த வகுப்பினர் என்று கருதப்பட்ட மற்ற சாதியினருக்கும் ஏற்றிப் பார்க்கும் வகையில் கதையின் கரு அமைந்துள்ளது. மாமியார், நாத்தனார் கொடுமை, தாய் பேச்சை மீறாத மகன், முதிய வயதில் இளம்பெண்ணை மறுதாரமாக மணந்து அல்லல் படுபவர்கள், கொடூர சித்தம் கொண்ட சிற்றன்னை என்று அந்தக் காலத்தில் தம் பிராமண சமூகத்தில் இருந்த கொடுமைகள் என்ற பிரச்சினைகளைக் கதைக்களமாகக் கொண்டு மிக நேர்த்தியாகவும் விரிவாகவும் புனைந்தளிக்கிறார் மாதவையா.

மாதவையாவின் நாவல்களில் சமூக சீர்திருத்த நோக்கம் மிகத் வெளிப்படையாகத் தெரிவது 'முத்துமீனாட்சி' கதையில்தான். விதவை மறுமணத்தை ஆதரித்து எழுதப்பட்ட அக்கால இந்திய நாவல்களில் முக்கியமானது இது. பெண்கள் பிரச்சனை பற்றிய முன்னோடி வட இந்திய நாவல்களிலும் சரி 'இந்திராபாய்' (கன்னடம்), 'இந்துலேகா' (மலையாளம்) ஆகிய தென் இந்திய நாவல்களிலும் சரி 'முத்து மீனாட்சி' தன்மைக் கூற்றில் எழுதப்பட்டு, பெண் பிரச்சனைகளை யாரும் சொல்லாத வகையில் சொல்லும் விதத்தில் தனித்து நிற்கிறது என்பதை விமர்சகர்கள் ஏற்றுக்கொள்கிறார்கள். விதவையின் சுய சரித்திரமாக எழுதப்பட்டதும் பெண்ணின் பார்வையில் தன்மைக்கூற்றில் எழுதப்பட்டதும் என அன்றைய இந்திய நாவல்களில் தனித்து நிற்பது முத்துமீனாட்சி என்று இந்திய இலக்கிய விமர்சன ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

சாவித்திரி என்ற அவ்விதவையின் துன்பங்களும்

செந்தமிழ் நாவல்கள்

# 3. முத்து மீனாக்ஷி

ஒரு பிராமணப்பெண் சுவசரிதை



"தோன்முறை மாறித் துலங்கும் புதுமுறை;
நன்முறை ஒன்றினே ஞாலம் அழுங்காமே
பன்முறையின் ஆளும் பரன்."



இது

பத்மாவதி சரித்திரம், விஜயமார்த்தாண்டம், குசிகர் குட்டிக் கதைகள், உதயலன், திருமலைசேதுபதி, சித்தார்த்தன், புத்தசரிதை, பாலராமாயணம், பாலவிநோதக் கதைகள், பொதுதர்மசத்கீதமஞ்சரி, புதுமாதிரிக் கலியாணப் பாட்டு, ஆசாரச் சீர்திருத்தம், பாரிஸ்டர் பஞ்சநதம், தில்லைக் கோவிந்தன் முதலிய பல பிரபலமான நூல்களின் ஆசிரியரும், பஞ்சாமிர்தம் பத்திராதிபருமான

அ. மாதவையர்

இயற்றியது



திருத்திய இரண்டாம் பதிப்பு

சென்னை

ஆசிரியர் அச்சுப்பிரசுராலயம்—புஸ்தகசாலை

எட்வர்டு எலியட் ரோடு—மயிலாப்பூர்

எட்டணு] 1924 [காபிரைட்

அவைகளின் நிவர்த்தியாக அமைந்த அவள் மறுமணமும்தான் கதையின் சாராம்சம். அக்காலகட்டத்தில் இது மிக புரட்சிகரமாக தோற்றியிருக்கும். இத்தகைய கதையை வெளியிடுவது தம் பத்திரிகைக்கே அபாயம் என்று கருதியே பத்திராதிபர் அதன் பிரசுரத்தை நிறுத்தியிருக்கலாம். நீண்ட இடைவேளைக்குப் பிறகு, 'சாவித்திரி சரித்திரம்' என்ற பெயர்களையும் இடங்களையும் மாற்றி ஆனால், கதைகருக் களம் மாறாமல் 'முத்து மீனாட்சி' நாவலாக வெளிவந்த பின்பும் பிரச்சனை தொடர்ந்தது. புத்தகத்தை எதிர்த்து, 'ஹிந்து' பத்திரிகை எழுதியது. ஆனால், இதற்கு விளைவு ஏதும் இருந்ததாகத் தெரியவில்லை.

புத்தகம் வெளிவந்து ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு, மாதவையாவின் மகள் லட்சுமி (1896-1958)யால், 'முத்துமீனாட்சி' ஆங்கிலத்தில் 'Social Reform Advocate' பத்திரிகையில் தொடராக மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்திருக்கிறது. இதர இந்தியப் பிராந்தியத்தவர்களுக்கு 'முத்து மீனாட்சி' நாவலின் உட்கருத்து எட்ட வேண்டுமென்பது இம்மொழிபெயர்ப்பின் காரணமாயிருக்கலாம். இது புத்தக வடிவம் பெற்றதாகத் தெரியவில்லை.

அன்றைய எழுத்து வரிவடிவில் 'முத்துமீனாக்ஷி' என்றே இந்நாவல் வழங்கி வந்திருந்தாலும், நான் இன்றைய வழக்கில் 'முத்து மீனாட்சி' என்று மாற்றியுள்ளேன். தமிழில் வழங்கும் கிரந்த எழுத்துக்கள் பெரும்பாலும் முதல் எழுத்தாகவும் ஒற்றெழுத்தாகவும் வரும்போது தவிர இடை, கடை எழுத்தாக வரும்போது தமிழின் உச்சரிப்பு இயல்புப்படி தேவையில்லாதவையாக ஆகின்றன. க்ஷ என்ற வரிவடிவம் குறிக்கும் உச்சரிப்பு ட்ச என்பதுதான். எனவே, உச்சரிப்பு மாறும் இடங்களில் மட்டும் கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்தலாம்.

பழைய உரைநடையில் சொல்களைச் சேர்த்து எழுதுவது இயல்பு. அது இன்றைய வாசகருக்கு அநாவசியச் சுமை. பழம் உரை நடையைச் சந்தி பிரித்து அச்சிடவேண்டியது அவசியம். பழந்தமிழ் இலக்கியத்தையே சந்தி பிரித்து அச்சிட்டுப் படிக்கும் இக்காலத்தில் உரைநடையைச் சந்தி பிரித்து அச்சிடுவதுதான் முறை. கவிதையைச் சந்தி பிரித்தால் மாத்திரை அளவு மாறி யாப்பு மாறுபடும். யாப்பு பற்றிய லட்சியமற்ற இந்த யுகத்தில் மாத்திரை பற்றியும் கவலைப்படத் தேவையில்லை. தேவைப்பட்டால் சேர்த்துப் புணர்த்திப் படித்துக்கொள்ளட்டும். எனவே, வாசகர்கள் வீண் சிரமத்தை மேற்கொள்ளாமல் எளிதில் படிப்பதற்கேற்ப, தேவைக்கேற்ப பத்தி பிரித்தும் சேர்த்தெழுதப்பட்ட சொல்தொடர்களைச் சந்தி பிரித்தும் பழைய வரி வடிவ எழுதுகளை மாற்றி புதிய முறையில் அமைத்தும் உச்சரிப்பு மாறாத இடத்தில் கிரந்த எழுத்துகளை மாற்றியும் இந்நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பின்பு தோன்றிய இலக்கணங்களின் படி சொல் சேர்க்கைகளை மாற்றி, நவீன அச்சு முறை வசதிக்கு ஏற்ப, தனித் தனியே அடைச் சொற்கள் பிரித்தமைக்கப்பட்டுள்ளன. கட்டாயம் இணைந்து வரவேண்டிய சொற்களைக் கூட இன்றைய அச்சு ஊடகத்தில் பிரித்தே அச்சிடலாம். சேர்த்துப் படித்துக் கொள்வார்கள். இவ்வகை இலக்கண மீறல்கள் தேவை என்பதையும் வழுவமைதிகளாகப் புதிய இலக்கணங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பதையும் கருத்தில் கொண்டே, அதாவது இலக்கண நோக்கில் அல்லாமல் மொழியியல் நோக்கில், இம்மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. ஏடுகளில் கல்வெட்டுகளில் பத்திகளுக்கோ அடிகளுக்கோ சொற்களுக்கோ வித்தியாசம் காட்டாமல் தொடர்ச்சியாக எழுதிய காலம் போய் இன்று எல்லாவற்றையும் பிரித்துப் பிரித்து எழுதும் காலம் வந்தது என்று கொள்வோமாக.

(முத்துமீனாட்சி (சாவித்திரி சரித்திரம்) - அ. மாதவையா புதிய பதிப்புக்கு எழுதப்பட்ட முன்னுரை)

**கால சுப்ரமணியம் <kasu.layam@gmail.com>**

---

முத்துமீனாட்சி (சாவித்திரி சரித்திரம்) - ஆ. மாதவையா; பதிப்பு: கால சுப்ரமணியம்; விலை. 130, வெளியீடு: தமிழினி, 63 நாச்சியம்மை நகர், சேலவாயல், சென்னை - 600051; மின்னஞ்சல்: tamilinibooks@gmail.com தொலைப்பேசி: +91 86672 55103

### கோபிச்செட்டிப்பாளையம் லட்சுமண ஐயர் (1918 - 2011)

# எளிமையும் நெருக்கமும்

## பாவண்ணன்

'வெள்ளையனே வெளியேறு' போராட்டத்தில் ஈடுபட்டதற்காக சிறைத் தண்டனையை அனுபவித்துவிட்டு, *1944*ஆம் ஆண்டு சொந்த ஊரான கோபிச்செட்டி பாளையத்துக்குத்திரும்பிவந்திருந்தார், அந்த இருபத்தேழு வயதான இளைஞர். ஒருநாள் தன் வயதையொத்த நண்பர்களுடன் சிறையனுபவங்களைப் பகிர்ந்தபடி உரையாடிக் கொண்டிருந்த தருணத்தில், கிரி என்னும் நண்பர் பேச்சோடு பேச்சாக, "காந்தியடிகளை சந்திக்கச் செல்லலாமா?" என்று கேட்டார். இளைஞரின் ஆழ்மனத்தில் கருவாக இருந்த அதே விருப்பம் அக்கணமே சுடர்விட்டு பெரிதானது. சென்னையில் உடல்நலம் குன்றியிருக்கும் நண்பரொருவரை பார்த்துவிட்டு வருவதாக வீட்டில் தெரிவித்துவிட்டு இருவரும் புறப்பட்டனர். நேராக சென்னைக்குச் சென்று அங்கிருந்து வண்டி மாறி வார்தாவுக்குப் போனார்கள்.



வார்தா நிலையத்தில் அவர்கள் இறங்கியபோது இரவு கவியத் தொடங்கிவிட்டது. அங்கிருந்து ஆசிரமத்துக்குச் செல்ல அவர்களுக்கு எந்த வண்டியும் கிடைக்கவில்லை. அதனால், இருவரும் உரையாடிய படியே ஆசிரமத்துக்கு நடந்து சென்றனர். அவர்கள் சென்று சேர்ந்த நேரத்தில் இரவுணவை முடித்துவிட்டு அனைவரும் உறங்கச் சென்றுவிட்டிருந்தனர். உணவும் கிடைக்கவில்லை. ஆசிரமத்தில் தங்கியிருப்பவர்களுக்குத் தேவையான அளவு மட்டுமே சமைக்கப்படுமென்று சொல்லப்பட்டது. மறுநாள் காலையில்தான் காந்தியடிகளை சந்திக்கமுடியும் என்றும் தெரிவிக்கப்பட்டது. வேறு வழியில்லாமல் இருவரும் மீண்டும் வார்தா நிலையத்துக்கு நடந்துவந்தார்கள்.

மறுநாள் அவர்கள் மீண்டும் ஆசிரமத்துக்குச் சென்றனர். காந்தியடிகளை சந்தித்து சத்தியாக் கிரகியாகத் தொண்டாற்றும் விருப்பத்தைத் தெரியப் படுத்தினர். காந்தியடிகள் தன்னோடு உரையாடிய இளைஞரை சிறிதுநேரம் கூர்ந்து நோக்கினார். பின்பு அவரைப் பற்றியும் அவருடைய ஊரைப் பற்றியுமான விவரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டார். பிறகு அமைதியான குரலில் அவரிடம் தேசத்துக்குத் தேவையான அளவில் சத்தியாகிரகிகள் தயாராக இருப்பதாகவும், தாழ்த்தப்பட்டவர்கள் முன்னேற்றத்துக்கு உழைப்பவர்களுக்கான தேவையே தற்சமயம் மிகுதியாக உள்ளதென்றும் தெரிவித்தார். தொடர்ந்து, "ஊருக்குத் திரும்பிச் செல். அங்கு வசிக்கும் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக சேவை செய். அவர்களுடைய பிள்ளைகள் படிப்பதற்கு பள்ளிக்கூடம் நடத்து. இச்செயல்களே இந்தக் காலத்துக்கு மிகமிக முக்கியம்" என்று தெரிவித்தார். அக்கணத்தில் காந்தியடிகளின் ஒவ்வொரு சொல்லையும் தனக்கு விதிக்கப்பட்ட கட்டளையாக எடுத்துக்கொண்டு உத்வேகத்துடன் திரும்பினார் அந்த இளைஞர். அந்த இளைஞரின் பெயர் லட்சுமண ஐயர்.

காந்தியடிகளைச் சந்திக்கச் செல்வதற்கு முன்பேயே சமூக சேவையில் ஆர்வமும் சுதந்திரப் போராட்ட வேட்கையும் நிறைந்தவராக இருந்தார் லட்சுமண ஐயர். அவர் தந்தையார் சீனிவாச ஐயர் வழியாக அக்குணங்கள் அவரிடம் இடம்பெற்றிருந்தன. மனிதர்களிடையே மேல் கீழ் பாகுபாடு பார்க்கும் எண்ணத்தை அறவே உதறிவிட்டு அனைவரோடும் சரிசமமாகப் பேசிப் பழகியவர் அவர். அவர் மட்டுமல்ல, அவருடைய குடும்பத்தினர் அனைவருமே அதேபோன்ற எண்ணமுடையவர்களாக இருந்தனர். கோபிச்செட்டிப்பாளையம் வழியாக பயணம் செய்யும் நேரு, வினோபா பாவே, சத்தியமூர்த்தி, இராஜாஜி என பல தலைவர்கள் வந்து தங்கி உரையாடிவிட்டுச் செல்லும் இடமாக அவருடைய வீடு இருந்ததால் சுதந்திரம் பற்றிய உரையாடல்களைக் கேட்டுக்கேட்டு அவரிடமும் அந்த நாட்டம் உருவானது.

*1931*ஆம் ஆண்டு கோபிச்செட்டிப்பாளையத்தில் சுதந்திரப் போராட்டம் பற்றி சொற்பொழிவாற்றுவதற்காக ஒருமுறை சத்தியமூர்த்தியை அழைத்திருந்தார் சீனிவாச ஐயர். அந்தக் கூட்டத்துக்கான அறிவிப்பு செய்தியை சிறுவனாக இருந்த லட்சுமண ஐயரே ஊர்முழுக்க பறையடித்துத் தெரிவித்தபடி நடந்து சென்றார். பிராமண வகுப்பைச் சேர்ந்த சிறுவன் ஊர்முழுக்க பறையடித்துக்கொண்டு செல்வதைப் பார்த்து முகம் சுளித்த பலர் சீனிவாச ஐயரைத் தேடிவந்து சந்தித்து புகாரளித்தனர். "இதற்காக ஏன் பதற்றமடைகிறீர்கள். இதில் குற்றம் சொல்ல ஒன்றுமில்லையே. அவன் என்னிடம் சொல்லிவிட்டுத்தான் சென்றிருக்கிறான். நீங்கள் சென்று உங்கள் வேலையைப் பாருங்கள்" என்று எடுத்துரைத்து அனுப்பிவைத்துவிட்டார்.

அதே நேரத்தில் காவலர்கள் அந்த சிறுவனைக் கைது செய்து காவல் நிலையத்துக்கு அழைத்து



சென்றுவிட்டனர். சிறுவன் என்றும் பாராமல் அணிந்திருந்த ஆடைகளைக் கழற்றச் சொல்லிவிட்டு அடித்துக் கொடுமை செய்தனர். ஆயினும் வாய்தவறிக் கூட அச்சிறுவன் தன்னைப் பற்றிய எந்த விவரத்தையும் அவர்களிடம் சொல்லவில்லை. வேதனையாலும் அச்சத்தாலும் சிறுநீர் வந்துவிட்டது. அதனால், அருவருப்படைந்த காவலர்கள் ஆடைகளை எடுத்து வீசியெறிந்து, ஓடிப் போய்விடு என்று சிறுவனை அனுப்பி வைத்துவிட்டனர்.

காந்தியடிகளைச் சந்தித்துவிட்டுத் திரும்பிய லட்சுமண ஐயர் தண்ணீர்த் தேவைக்காக அங்குமிங்கும் அலைந்து திரியும் தாழ்த்தப்பட்டோரின் நிலையை சரிசெய்ய எண்ணினார். அந்த ஊரில் மொத்தம் இருபத்தாறு பொதுக்கிணறுகள் இருந்தன. ஆனால், அவ்விடங்களில் வசித்துவந்த உயர்வகுப்பைச் சேர்ந்தவர்கள் மட்டுமே அக்கிணறுகளைப் பயன்படுத்தி வந்தனர். அக்கிணறுகளில் தண்ணீர் எடுக்கவரும் தாழ்த்தப்பட்டவர்களைத் தடுத்து திருப்பியனுப்பினார்கள். வாய்வழி உத்தரவாக அந்தத் தடை எல்லா இடங்களிலும் நிலவியது. அதனால், தாழ்த்தப்பட்டோர் ஊரைத் தாண்டி வெகுதொலைவு நடந்து சென்று கிடைக்கும் நீரைக் கொண்டுவந்து பயன்படுத்தும் நிலைக்கு ஆளானார்கள். அவர்களை அழைத்த லட்சுமண ஐயர் தமக்கு சொந்தமான கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துச் செல்லுமாறு சொன்னார்.

லட்சுமண ஐயரின் செய்கை ஊராரைக் கொதிக்க வைத்தது. உடனே அனைவரும் சேர்ந்து கடுமையான குரலில் அவரை வசைபாடத் தொடங்கினர். தாழ்த்தப்பட்டவர்கள் தண்ணீர் எடுக்க அனுமதிக்கக்கூடாது என்று மிரட்டினார்கள். தமக்குச் சொந்தமான இடத்தில் தம் தேவைக்காக அமைத்த கிணற்று நீரை தம் விருப்பம்போல மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ளும் உரிமை தனக்கு இருக்கிறது என்றும், அதைத் தடுக்கும் உரிமை யாருக்கும் இல்லை என்றும் தெரிவித்துவிட்டு அமைதியாக இருந்தார் லட்சுமண ஐயர்.

அவரை தடுக்கமுடியாத ஊரார் அவரையும் அவருடைய குடும்பத்தாரையும் அக்கணமே சாதிவிலக்கம் செய்வதாகத் தெரிவித்தனர். அதைக் கேட்டு லட்சுமண ஐயர் சிறிதும் மனம் தளர்ந்துவிடவில்லை. இருபத்தாறு பொதுக் கிணறுகளிலும் தண்ணீர் எடுத்துக்கொள்ளும் உரிமை தாழ்த்தப்பட்டவர்களுக்கு வழங்கப்பட வேண்டும் என்று நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தார். அதனால், மேலும்சீண்டப்பட்ட ஊரார் அவர் மீதுதீராத பகைமை கொண்டவர்களாக மாறினர். அவருடைய சகோதரி புகுந்த வீட்டிலிருந்து பிறந்த வீட்டுக்குத் உடனடியாக திருப்பி அனுப்பப்பட்டார். ஆயினும் வழக்கைத் தொடர்ந்து நடத்தி வெற்றி பெற்றார் லட்சுமண ஐயர். அந்தத் தீர்ப்பின் வழியாகத்தான் எல்லாக் கிணறுகளிலிருந்தும் தண்ணீர் எடுத்துக்கொள்ளும் உரிமையை சட்டப்படி பெற்றனர் தாழ்த்தப்பட்டோர்.

கோபிச்செட்டிப்பாளையத்தை ஒட்டி புதுப்பாளையம் என்னுமிடத்தில்

தாழ்த்தப்பட்டோர் கூடி வசிக்கும் ஒரு குடியிருப்பு இருந்தது. ஏறத்தாழ இருநூறு குடும்பங்கள் அங்கு வசித்து வந்தார்கள். அப்பகுதிக்கு அருகில் மேல்வகுப்பினருக்குச் சொந்தமான விளைநிலங்கள் இருந்தன. அவர்கள் ஏதோ ஓர் அவசரத் தேவையை முன்னிட்டு அக்குடியிருப்புக்கு அறுநூறு ரூபாய் கொடுத்து உதவினர். நாளடைவில் தம் நிலங்களில் மட்டுமே அவர்கள் வேலை செய்யவேண்டும் என்றும் வாரத்தில் இரண்டு நாட்கள் செய்யும் வேலைக்கு கூலி தரப்படமாட்டாது என்றும் அவர்களுக்கு வழங்கப்பட்ட தொகைக்கான வட்டியாக அந்தக் கூலி எடுத்துக்கொள்ளப்படும் என்றும் தந்திரமாகச் சொல்லப்பட்டது. அதனால், மெல்ல மெல்ல அடிமைமுறையில் வேலை செய்பவர்களாக அவர்கள் மாறத் தொடங்கினர்.

கோபியைச் சுற்றி இப்படிப்பட்ட பதினொரு குடியிருப்புகள் அமைந்திருந்தன. சிறுசிறு தொகையை கடனாகப் பெற்றுவிட்டு, காலமெல்லாம் அவர்கள் அடிமைகளாக வேலை செய்துவந்தனர்.

அடிமை முறையிலிருந்து அக்குடியிருப்புகளை விடுவிக்க லட்சுமண ஐயர் ஒரு திட்டத்தை அங்கு குடியிருப்பவர்களுடன் பகிர்ந்துகொண்டார். ஒவ்வொருவரும் ஒவ்வொரு வாரமும் தம் ஊதியத்திலிருந்து அரையணா கொடுக்கவேண்டுமென்று சொல்லி, அதை அனைவரும் ஏற்றுக்கொள்ளும்படி செய்தார். ஒவ்வொரு குடியிருப்பிலும் அந்தப் பணத்தை வசூல் செய்ய ஒருவரை நியமித்தார். சில மாதங்களிலேயே கடனை அடைக்கத் தேவையான தொகை திரண்டுவிட்டது. உடனே தொகை வழங்கிய பெரிய மனிதரிடம் திருப்பியளித்து, அடிமை முறையிலிருந்து அனைவரும் விடுபட்டனர். அதற்குப் பிறகு சுதந்திரமாக ஒவ்வொருவரும் அவரவர்களுக்கு விருப்பப்பட்ட நிலத்துக்கு வேலை செய்யச் சென்றார்கள். தமக்குரிய நியாயமான கூலியையும் கேட்டுப் பெற்றார்கள்.

காந்தியடிகள் ஹரிஜன சேவா சங்கத்தை 1932ஆம் ஆண்டில் தொடங்கினார். நாடெங்கும் அதற்குக் கிளைகள் உருவாகின. அக்கிளைகளில் பணியாற்றியவர்கள் ஊரெங்கும் அலைந்து திரிந்து தீண்டாமையைப் பற்றிய பார்வை மாறும் வகையில் பரப்புரை செய்வதில் ஈடுபட்டார்கள். மேலும், பல இடங்களில் தாழ்த்தப்பட்டோர்கள் படிப்பதற்கு பள்ளிகளையும் தங்குவதற்கு விடுதிகளையும் தொடங்கி நடத்தினார்கள். லட்சுமண ஐயரின் தந்தையாரான சீனிவாச ஐயர் கோபிச்செட்டிப்பாளையத்திலேயே, ‘டி.எஸ். ராமன் மாணவர் விடுதி’யையும் ‘சரோஜினிதேவி விடுதி’யையும் தொடங்கி தாழ்த்தப்பட்டோர் பிரிவைச் சேர்ந்த சிறுவர்களும் சிறுமிகளும் தங்குவதற்கு வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்தார்.

இந்நிலையில், காந்தியடிகளைச் சந்தித்துத் திரும்பிய லட்சுமண ஐயருக்கு தம் குடும்பத்தினர் நடத்திவரும் பள்ளிகளின் எண்ணிக்கையும் விடுதிகளின் எண்ணிக்கையும் போதாது என்று தோன்றியது. எனவே, முதற்கட்டமாக அவற்றை விரிவாக்கும் வேலைகளில் மூழ்கினார். தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்த பிள்ளைகள் எளிதாக வந்து செல்வதற்குத் தோதான இடங்களை முதலில் தீர்மானித்துக்கொண்டார். பிறகு அந்தக் குறிப்பிட்ட கிராமத்தில் தம் குடும்பத்துக்குச் சொந்தமாக உள்ள இடங்களை பள்ளிக்காக இலவசமாக ஒதுக்கினார். அடுத்து, அந்த இடத்தில் கட்டடங்களை எழுப்பி, புதிய பள்ளிகளும் விடுதிகளும் தடையின்றி இயங்க வழிவகுத்தார். ஊருக்கு அருகிலேயே இருக்கும் கல்வி வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளும்படி ஊர்க்காரர்கள் அனைவரையும் சந்தித்து கேட்டுக்கொண்டார். தொடக்கத்தில் மிகவும் குறைவான எண்ணிக்கையிலேயே பிள்ளைகள் பள்ளியில் சேர்ந்தார்கள். பிறகு படிப்படியாக அந்த எண்ணிக்கை உயரத் தொடங்கியது.

சிறுவர், சிறுமியருக்கு விடுதிகளை உருவாக்கிக் கொடுத்ததை அடுத்து தாழ்த்தப்பட்டோர் குடும்பங்களில் உள்ள குழந்தைகளைப் பற்றியும் யோசிக்கவேண்டும் என்று லட்சுமண ஐயருக்குத் தோன்றியது. வயல்வேலைகளுக்குச் செல்லும் பெண்கள் தம் குழந்தைகளை விட்டுவிட்டு வர பாதுகாப்பான இடமென எதுவும் இல்லாமையால் தொடர்ச்சியாகவேலைக்குச்செல்வதில் அவர்களுக்குச் சில இடர்கள் இருந்தன. குழந்தைகளுக்கென தனியாக ஒரு காப்பகத்தைத் தொடங்கவேண்டுமென லட்சுமண ஐயருக்கு அப்போது முடிவு செய்தார். தொடக்கத்தில் பெரிய மொடச்சூர், சிவசண்முகம் பிள்ளை வீதி ஆகிய இடங்களில் இரு காப்பகங்களை உருவாக்கினார்.

காலை முதல் இரவு வரை குழந்தைகளைப் பாதுகாப்பதில் தொடங்கி, ஆட்டமும் பாட்டும் சொல்லிக்கொடுத்து அவர்களை மகிழ்ச்சியாகப் பார்த்துக்கொள்வது, வேளைக்குச் சரியாக உணவு கொடுப்பது, வேலை முடிந்து பெற்றோர்கள் திரும்பிவரும்போது குழந்தைகளை ஒப்படைப்பது வரைக்குமான பணிகளைச் செய்ய அவர்களுக்கு ஆட்கள் தேவைப்பட்டார்கள். ஒவ்வொரு காப்பகத்துக்கும் இரு ஆசிரியர்களையும் மூன்று உதவியாளர்களையும் நியமித்து, அவை சிறப்பான முறையில் செயல்படும்படி பார்த்துக்கொண்டார். வேறொரு பகுதியில் தமக்குச் சொந்தமாக இருந்த நிலங்களை விற்பனை செய்ததன் வழியாக கிட்டிய பணத்தை வைத்துக்கொண்டு கட்டடங்களின் கட்டுமான செலவுகளைச் சமாளித்தார்.

ஆனாலும், தொடர் பராமரிப்பு காரணமாக நாளுக்குநாள் செலவுத்தொகை பெருகிக்கொண்டே போனது. விடுதிகளில் தங்கிப் படிக்கும் பிள்ளைகளுக்கு சத்தான உணவு போடவேண்டியிருந்தது. ஒருமுறை செலவுத்தொகையை ஈடுகட்டும் பொருட்டு ஒருவரிடம் கடனாகக் கேட்டிருந்த தொகை கைக்கு வரவில்லை. விடுதியில் அன்று இரவு உணவு சமைப்பதற்குத் தேவையான பொருட்களை இனிமேல்தான் கடைக்குச் சென்று வாங்கிவரவேண்டும் என்கிற நிலைமை. மேற்பார்வையாளர் தகவலைத் தெரிவித்துவிட்டு லட்சுமண ஐயரையே பார்த்தபடி இருந்தார். பொழுது கழியக்கழிய ஒருவருக்கும் என்ன செய்வதென்று புரியவில்லை. பணம் கொண்டு



வருவதாகச் சொன்னவர் வந்தபாடில்லை. பள்ளிக்குச் சென்ற குழந்தைகள் ஒவ்வொருவராக திரும்பிக் கொண்டிருந்தனர். அதற்குமேல் பொறுக்கமுடியாது என்பதுபோல லட்சுமண ஐயர் தன் கைவிரலில் அணிந்திருந்த தங்க மோதிரத்தைக் கழற்றி மேற்பார்வையாளரிடம் கொடுத்து, உடனடியாக அதை அடகுவைத்து பணம் வாங்கி செலவைச் சமாளிக்குமாறு சொல்லி அனுப்பினார்.

காந்தியடிகளின் ஆணைப்படி நடைபெற்றுவரும் சேவைகளில், எக்காரணத்தை முன்னிட்டும் குண்டுமணி அளவு கூட குறைந்துவிடக்கூடாது என்பதில் லட்சுமண ஐயர் எப்போதும் உறுதியாக இருந்தார்.

நாட்கள் செல்லசெல்ல அவர் மனம் மேலும் விரிவடைந்தது. ஒரு கட்டத்தில் நன்றாக படிக்கும் பிள்ளைகளுக்கு தம் வீட்டு மாடியிலேயே ஒரு அறையை ஒதுக்கிக் கொடுத்தார். அவர்களை அங்கேயே தங்கவைத்துக் கொண்டார். அவர்களுக்கு உணவும் உடையும் கொடுத்து படிக்கவைத்தார். நாளடைவில் அவர் வீடே ஒரு விடுதியாக மாறி விட்டது.

அந்தக் காலத்தில் சாதியடுக்கில் மேல்நிலையில் உள்ளவர்களுடைய வீடுகளில் நடைபெறும் திருமணங்களுக்கும் காதணி விழாக்களுக்கும் பொது நிகழ்ச்சிகளுக்கும் ஊரில் உள்ள அனைவரையும் அழைத்து விருந்தளிப்பது வழக்கம். ஆனால், பந்தல் போடுவதில் தொடங்கி, வேலி கட்டுவது வரைக்கும் எல்லா வேலைகளுக்கும் அவர்களுக்குத் துணையாக இருக்கும் தாழ்த்தப்பட்டவர்களுக்கு மட்டும் அழைப்பிதழ்கள் கொடுக்கப்படுவதில்லை. அவர்கள் விருந்துக் கூடத்துக்குள் அனுமதிக்கப்படுவதில்லை. அவர்கள் அனைவரும் கைகளில் பாத்திரங்களை ஏந்திக்கொண்டு வீதியில் வரிசையாக நிற்கவேண்டும். நிகழ்ச்சி நடைபெறும் வீட்டுக்குள் கால்வைக்க முடியாது. நிகழ்ச்சி நிறைவு பெற்று, அனைவரும் விருந்துண்டு முடித்த பிறகு உணவுப் பாத்திரங்களை வாசலுக்கு எடுத்துவந்து வரிசையில் நிற்கும் தாழ்த்தப்பட்டவர்களின் பாத்திரங்களில் கைபடாமல் போட்டு நிரப்பி அனுப்புவார்கள்.

அதை வாங்கிய வேகத்தோடு அவர்களை வாழ்த்திவிட்டு வேகவேகமாக தம் குடியிருப்புகளை நோக்கி தாழ்த்தப்பட்டவர்கள் அனைவரும் ஓடிவிடுவார்கள். சில நேரங்களில் இந்த விருந்தோம்பல் நள்ளிரவையும் கடந்துவிடும். வரிசையில் நிற்பவர்கள் அலுத்து இடம்மாறி கலைந்து நிற்பதையோ, சலிப்பை மறக்க எதையாவது பேசிச் சிரிப்பதையோ, கட்டுப்பாட்டை இழந்து முண்டியடிப்பதையோ காண நேர்ந்தால் மோனைக்காரர் எனப்படும் மேல்சாதிக்காரரின் கையாள் கையில் வைத்திருக்கும் வாழை மட்டையாலேயே அவர்களை அடித்து சரிப்படுத்துவது வழக்கம்.

ஒருநாள் இக்காட்சியைக் கண்ட லட்சுமண ஐயர் மனம் வருந்தினார். மறுநாள் தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புக்கே நேராகச் சென்று அழைப்பில்லாமல் இனி எந்த நிகழ்ச்சிக்கும் யாரும் போகக்கூடாது என்று எடுத்துரைத்துப் புரியவைத்தார். தன்மானத்துக்கும் கௌரவத்துக்கும் இழுக்கு நேராதவகையில் வழங்கப்படும் விருந்துணவை மட்டுமே உண்ணவேண்டும் என்றும் எடுத்துரைத்தார். அவர் சொல்வதில் உள்ள உண்மையை அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகப் புரிந்துகொண்டார்கள். பிறகு தம்மைத்தாமே கட்டுப்படுத்திக்கொண்டு விழாக்களுக்குச் சென்று உணவைப் பெற்று வரும் வழக்கத்தை அவர்கள் அன்றே விட்டொழித்தார்கள்.

கோபிச்செட்டிப்பாளையம் பகுதியில் ஹரிஜன சேவா சங்கத்தைத் முதன்முதலாகத் தொடங்கி திறம்பட செயலாற்றி வந்தவர் லட்சுமண ஐயரின் தந்தையாரான சீனிவாச ஐயர். அவரைத் தொடர்ந்து ஸ்ரீகண்டய்யா என்பவர் செயலாற்றினார். அடுத்து சங்கத்தின் பொறுப்பை 1946இல் ஏற்றுக்கொண்ட லட்சுமண ஐயர் 2005 வரைக்கும் செயலாற்றி வந்தார்.

லட்சுமண ஐயரைப் போலவே அவருடைய மனைவி இலட்சுமி அம்மையாரும் சமூக சேவைகளில் ஆர்வம் கொண்டவர். வழக்கறிஞரான அவருடைய தந்தையார் சுந்தரராஜ ஐயரின் வழியாக அந்த ஆர்வம் இலட்சுமி அம்மையாரிடமும் ஊறி வளர்ந்தது. ஹரிஜன நலநிதி திரட்டும்பொருட்டு தமிழகத்துக்கு வந்த காந்தியடிகள் பழனி நகருக்கு வந்தபோது சுந்தரராஜ ஐயரின் வீட்டில்தான் தங்குவதற்கான ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

காந்தியடிகளைக் காணும்பொருட்டு சுந்தரராஜ ஐயரின் வீட்டுக்கு முன்னால் ஏராளமானோர் கூடியிருந்தார்கள். அவர்களோடு சில நிமிடங்கள் உரையாடிய காந்தியடிகள் அவர்களுக்கு முன்னால் தன் தோளில் இருந்த துண்டை விரித்துப் பிடித்துக்கொண்டு தெய்வத்துக்கு கொடுக்கிற காணிக்கையாக நினைத்து ஹரிஜன மக்களின் மேம்பாட்டுக்காக நிதி கொடுக்குமாறு அனைவரிடமும் கேட்டுக்கொண்டார். அனைவரும் தம்மிடம் இருந்த பணத்தை அன்பளிப்பாக அளித்தனர். சில பெண்கள் உடனடியாக தாம் அணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றி மனமுவந்து அளித்தனர். சுந்தரராஜ ஐயர் வீட்டிலிருந்த தங்க நகைகளையும் தங்க நாணயங்களையும் கொண்டுவந்து கொடுத்தார். அவருடைய மனைவி தாம் அணிந்திருந்த வளையல்களைத் தவிர மற்ற எல்லா அணிகலன்களையும் கழற்றி அவரிடம் வழங்கினார். சிறுமியான இலட்சுமி தன் கைகளில் அணிந்திருந்த எல்லா வளையல்களையும் கழற்றி காந்தியடிகள் விரித்த துணியில் வைத்தார். இதைக் கவனித்த காந்தியடிகள், "நீங்கள் இருவரும் ஆளுக்கொரு அணிகலனை வைத்துக்கொண்டு மற்றவற்றைக் கொடுத்தீர்கள். உங்கள் மகளோ தானாகவே அனைத்தையும் கொடுத்துவிட்டாள். இயற்கையிலேயே கருணையுள்ளம் கொண்டவளாக இவளை நீங்கள் வளர்த்திருக்கிறீர்கள்" என்று சொல்லிப் பாராட்டி மகிழ்ந்தார்.

அங்கு கூடியிருந்தவர்கள் பழனி முருகனின் பெருமையைச் சொல்லி, அத்தெய்வத்தைத் தரிசிக்க வருமாறு அழைத்தார்கள். "நீங்கள் சொல்லும் இந்தப் புகழ்பெற்ற ஆலயத்தில் ஹரிஜன மக்கள் அனுமதிக்கப்படுகிறார்களா?" என்று கேட்டார். பெரும்பாலானோர் அமைதியாக நிற்க, ஒருசிலர் மட்டும் இல்லை என்பதுபோலத் தலையசைத்தனர். உடனே காந்தியடிகள், "முதலில் அவர்கள் அனுமதிக்கப்படட்டும். அதற்குப் பிறகு நான் வருகிறேன்" என்று சொல்லிவிட்டார். 1946இல் காந்தியடிகள் மீண்டும் பழனிக்கு வருகை தந்தபோது அன்று நடந்ததை அவருக்கு நினைவூட்டி, "இப்போது ஆலயத்துக்குள் ஹரிஜனர்கள் தாராளமாக சென்று வரும் அளவுக்கு காலம் மாறிவிட்டது. இப்போதாவது நீங்கள் அவசியமாக வந்து முருகனைத் தரிசிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டனர். அதைக்கேட்டு மகிழ்ந்த காந்தியடிகள் அனைவரோடும் ஆலயத்துக்குள் சென்று வணங்கிவிட்டுத் திரும்பினார்.

இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு கோபிச்செட்டிபாளையத்தின் நீர்த்தேவைக்காக ஒரு மேல்நிலை நீர்த்தேக்கத்தொட்டியைக் கட்டியெழுப்ப வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. அதற்குப் பொருத்தமான இடத்துக்காக அரசு அலைந்தபோது, பவானி ஆற்றின் கரையோரத் திலிருந்த தனக்குச் சொந்தமான நிலத்தை மனமுவந்து இலவசமாக அரசுக்கு வழங்கினார் லட்சுமண ஐயர். மூன்றாண்டு காலம் அந்த வேலை நடைபெற்று முடிந்ததும் அந்த நீரேற்று நிலையம் உடனடியாக பயன்பாட்டுக்கு வந்தது. அந்த நீர்த்தேக்கத்திலிருந்து வெளியேற்றப்படும் நீர் கோபிச்செட்டிப்பாளையத்துக்கு மட்டுமன்றி நகரையொட்டிய லக்கம்பட்டி, கள்ளிப்பட்டி, கரட்டடிபாளையம் போன்ற இடங்களுக்கும் சென்றது.



காந்தியடிகளின் மறைவுக்குப் பிறகு லட்சுமண ஐயரின் சேவையுணர்வு மிகவும் தீவிரமுற்றது. அவருடைய எண்ணம் முழுதும் தாழ்த்தப்பட்டோர் மேம்பாட்டிலேயே மையம் கொண்டிருந்தது. விடுதியில் தங்கிப் படிக்கும் பிள்ளைகள் வயிறார உண்ண வேண்டும் என்பதிலும் அவர்கள் அனைவரும் நல்ல கல்விமான்களாக உயரவேண்டும் என்பதிலும் அவர் ஆழ்ந்த அக்கறை கொண்டிருந்தார்.

எந்தக் குடும்பமாக இருந்தாலும், அக்குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் படித்து பட்டம் பெற்று வேலைக்குச் செல்வது என்பது பொருளாதார நிலையில் அக்குடும்பத்தை சற்றே மேம்பட்ட உயரத்துக்கு அழைத்துச் செல்லும். இது பொதுவான உண்மை. தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்த ஒரு குடும்பத்திலிருந்து ஒருவர் இந்த உயரத்தைத் தொடும்போது, பொருளாதார நிலையை உயர்த்துவதோடு மட்டுமன்றி சமூக கௌரவ நிலையையும் உயர்த்தும் என்பது லட்சுமண ஐயரின் கருத்து. அதனால், தன் பார்வையில் படும் தாழ்த்தப்பட்டோர் பிரிவைச் சேர்ந்த சிறுவர்களை நன்றாகப் படிக்கும்படி எப்போதும் ஊக்கப்படுத்தியபடியே இருப்பார்.

அவருடைய சொந்த மகன் சுந்தரவடிவேல் புகுமுக வகுப்பில் தேர்ச்சி பெற்றதும் பொறியியல் படிப்பைப் படிக்க விரும்பினார். பி.எஸ்.ஜி.




குழுமத்தின் கல்லூரியில் படிக்கவேண்டும் என்பது அவர் விருப்பம். பொறியியல் படிப்புக்குத் தேவையான அளவுக்கு தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்றிருந்தார். அவருக்கு தானாகவே கூட அந்த இடம் கிடைக்கக்கூடும். ஆயினும் நிர்வாகத் தலைமையைச் சந்தித்து லட்சுமண ஐயர் ஒரு சொல் சொல்லவேண்டும் என்று சுந்தரவடிவேல் எதிர்பார்த்தார். லட்சுமண ஐயருக்கு அப்படி பரிந்துரைப்பதில் உடன்பாடில்லை. எனவே, மகனுடைய கோரிக்கையை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. தினமும் மகன் கேட்டுக்கொண்டே இருந்ததால் வேறு வழியின்றி ஒருமுறை சென்று நிர்வாகத் தலைமையைச் சந்தித்துவிட்டு வருவதாகச் சொல்லிவிட்டு தனியாகப் புறப்பட்டார். பிறகு மாலையில் திரும்பி வந்து பொறியியல் படிப்புக்கான சேர்க்கை முடிந்துவிட்டதெனச் சொன்னதாகத் தெரிவித்துவிட்டு அறிவியல் பிரிவில் பட்டப்படிப்பைப் படிக்கும்படி மகனுக்கு ஆலோசனை வழங்கினார். வேறு வழியின்றி அடுத்தநாளே மகன் கல்லூரிக்குச் சென்று அறிவியல் பிரிவில் பட்டப்படிப்பில் சேர்ந்துவிட்டார்.

ஓராண்டுக்குப் பிறகு அதே கல்லூரியில் ஆண்டுவிழா நடைபெற்றது. அவ்விழாவுக்கு லட்சுமண ஐயர் சிறப்பு விருந்தினராக்க் கலந்துகொள்ளச் சென்றிருந்தார். பார்வையாளர் அரங்கில் மாணவர்களிடையில் அவர் மகன் சுந்தரவடிவேலும் அமர்ந்திருந்தார். அப்போது அவருக்கு அருகில் அமர்ந்திருந்த வேறொரு மாணவர் எழுந்து லட்சுமண ஐயரைப் பார்த்து புன்னகையுடன் வணங்கிவிட்டு அமர்ந்தார். எதற்காக இந்தச் சிறப்பு வணக்கம் என்று புரியாத சுந்தரவடிவேல் அவரிடமே வணங்கியதற்கான காரணத்தைக் கேட்டார். "அவர் இல்லாவிட்டால் நான் இந்தக் கல்லூரியில் பொறியியல் படிப்பில் சேர்ந்திருக்கவே முடியாது. அவர் சொன்னதால்தான் எனக்கு இங்கு இடம் கிடைத்தது" என்று தெரிவித்தார் அந்த மாணவர்.

சுந்தரவடிவேலுக்கு ஒன்றும் புரியவில்லை. "எப்படி?" என்று குழப்பத்தோடு கேட்டார்.

அந்த மாணவர் தொடர்ந்து, "ஒருநாள் இங்கே வந்து இடம் கிடைக்குமோ கிடைக்காதோ என்ற குழப்பத்துடன் என் மதிப்பெண் பட்டியலோடு தயக்கத்தோடும் அச்சத்தோடும் நின்றிருந்தேன். உள்ளே சென்று கேட்கலாமா கூடாதா என்று குழப்பம் வேறு. அப்போதுதான் ஐயா என்னை நெருங்கி வந்து அவராகவே விவரம் கேட்டார். ஒரு வேகத்தில் நான் எல்லாவற்றையும் அவரிடம் கொட்டிவிட்டேன். பிறகு என் பெயர், ஊர், மதிப்பெண் விவரங்களையெல்லாம் எழுதிக் கொடுக்கும்படி கேட்டு வாங்கிக்கொண்டு இங்கேயே நில், எங்கும் போய்விடாதே என்று சொல்லிவிட்டு நிர்வாக அறைக்குள் சென்றுவிட்டார். சிறிது நேரத்துக்குப் பிறகு அவர் வெளியே வந்து, "உனக்கு இடம் கொடுக்கும்படி சொல்லிவிட்டேன். நீ போய் சேர்ந்து படி. அக்கறையாகப் படித்து பட்டம் வாங்கு" என்று சொல்லி என் முதுகில் தட்டிக்கொடுத்துவிட்டுச் சென்றுவிட்டார். அப்போது அவர் யார் என எனக்குத் தெரியாது. நான் நிர்வாக அறைக்குள் சென்று நின்றதும் எனக்கு அவர்கள் உடனே இடம் கொடுத்துவிட்டார்கள். என்னால் நம்பவே முடியவில்லை. உடனேயே கல்லூரியில் சேர்ந்துவிட்டேன். பிறகுதான் ஐயாவைப் பற்றி



விசாரித்துத் தெரிந்துகொண்டேன். பாடம், படிப்பு என்று நாட்கள் கடந்துவிட்டன. அவரை நேரில் சென்று சந்திக்கவே முடியவில்லை. ஓராண்டு கழித்து இன்றுதான் அவரைப் பார்க்கிறேன். பார்த்ததுமே வணக்கம் சொல்லத் தோன்றியது. எனக்கு வழிகாட்டிய தெய்வம் அவர்" என்று சொன்னார்.

தனக்குக் கிடைக்க வேண்டிய வாய்ப்பை தன் தந்தை இன்னொரு மாணவருக்கு ஏற்படுத்திக் கொடுத்த காரணம் புரியாமல் சுந்தரவடிவேல் குழம்பினார். அன்று இரவு வீட்டுக்குத் திரும்பியதும் அப்பாவும் மகனும் இதைப் பற்றித்தான் பேசிக்கொண்டார்கள். லட்சுமண ஐயர் கனிவுடன், "அந்த மாணவன் தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்தவன். ஒரு பொறியியல் பட்டம் என்பது அவன் வாழ்க்கையை மட்டுமல்ல, அவனோடு தொடர்புள்ள பலருடைய வாழ்க்கையை கௌரவமுள்ளதாக மாற்றும். உன் நிலையில், நீ எந்தப் பிரிவில் பட்டம் வாங்கினாலும் ஒன்றுதான். நீ வாங்கும் பட்டம் பட்டமாக மட்டுமே இருக்கும். அவன் வாங்கும் பட்டம் பட்டமாகவும் இருக்கும், கௌரவமாகவும் இருக்கும், புரிந்துகொள்" என்று சொன்னார்.

கோபிச்செட்டிப்பாளையம் நகராட்சித் தலைவராக 1952 முதல் 1955 வரை பணியாற்றும் வாய்ப்பைப் பெற்றார் லட்சுமண ஐயர். அப்போது துப்புரவுப் பணியாளர்கள் குடியிருப்பதற்காக இலவசமாக ஒரு குடியிருப்பை உருவாக்கி அளித்தார். 1986ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் வெற்றி பெற்று அவர் மீண்டும் தலைவராகப் பொறுப்பேற்றார். அப்போது நகரத்தில் உள்ள அனைத்து உலர்கழிப்பறைகளையும் ஒழித்துக் கட்டினார். இதன் வழியாக மனித மலத்தை மனிதரே கையால் அள்ளும் அவலநிலை அந்த நகராட்சியில் முடிவுக்கு வந்தது. நாட்டிலேயே அப்பழக்கத்தை ஒழித்த முதல் நகராட்சி கோபிச்செட்டிப்பாளையம்தான்.

கோபிச்செட்டிப்பாளையத்திலும் அதைச் சுற்றியிருந்த கிராமங்களிலும் லட்சுமண ஐயர் குடும்பத்துக்குச் சொந்தமாக ஏறத்தாழ அறுநூற்றைம்பது ஏக்கர் நிலம் இருந்தது. பள்ளிக்கூடங்கள் கட்டவும் பள்ளிக்கு விளையாட்டு மைதானங்கள் அமைக்கவும் அரசு அலுவலகங்கள் கட்டவும் கரட்டடிபாளையத்திலும் ஸ்ரீராமபுரத்திலும் தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புகளை உருவாக்கவும் பல ஏக்கர் நிலங்களை இலவசமாக வழங்கினர். ஏற்கனவே உருவாக்கிய பள்ளிகளின் செலவுக்காகவும் விடுதிகளின் செலவுகளுக்காகவும் இன்னும் பல ஏக்கர் நிலங்களை விற்கவேண்டியிருந்தது. வங்கியில் வாங்கியிருந்த கடன் அடைக்கப்படாததால் வங்கி நிர்வாகம் அவருக்குச் சொந்தமாக எஞ்சியிருந்த நிலங்களையும் அவர் குடும்பம் வாழ்ந்த வீட்டையும் ஏலத்துக்குக் கொண்டுவந்தது. ஏலம் எடுத்த மனிதர் அவருடைய பண்புகளை அறிந்து ஏலத்தில் எடுத்த வீட்டை மட்டும் அவரிடமே கொடுத்துவிட்டார். காந்தியடிகளின் கட்டளைப்படி தான் உருவாக்கிய கல்வி நிலையங்களையும் விடுதிகளையும் பார்த்தபடி அந்த வீட்டிலேயே இறுதிமூச்சுள்ள வரைக்கும் வாழ்ந்து மறைந்தார், லட்சுமண ஐயர். ●

**பாவண்ணன் <paavannan@hotmail.com>**



# டி. கண்ணன் கவிதைகள்

1

அது அவன் சொந்த பெயரில்லைதான்
ஆனாலும் அந்த பெயர் சொல்லித்தான் அழைப்பேன்
அவன் திரும்புவான்
காலம் பிந்திய நிலையில்
அதே பெயரில்தான் இன்றும் அழைக்கிறேன்
அவன் திரும்புகிறான் இல்லை
அவனுடைய மறதிக்கும்
அடைந்துவிட்ட வசதிக்கும்
நான் பொறுப்பில்லை

2

இடமிருந்து வலமாக
சீவிக்கொள்பவன் அவன்
வகிடு இடதில்
வலமிருந்து இடமாக கோதிக்கொள்வது பழக்கம்
வாசிப்பும் அங்ஙனமே
குருவிற்கு கோபம்
(வலமிருந்து இடமாக அசைந்தன அவரது தோள்கள்)
அருகாமை மருதமலைக்கு
சென்று மொட்டையடித்துக் கொண்டான்
கோதல் சீரானது
வாசிப்பு துல்லியம்
குருவிற்கு திருப்தி

3

15 வருடங்களுக்கு பிறகு
அந்த நண்பனை (ரை) குரலில்
சந்தித்தேன்
சந்திப்பில் சந்தோஷமா?
இல்லையென்றன
நினைவின் கோடை மழைகள்
மனதின் தொலைதூரக் குயில்
சந்தோஷமே என்றது
பரிசீலிக்கலாம் என்றது
பகல் நேர நதிக்குளியல்
இல்லை இல்லையென்றது
சூசகமாய் எதிர் முனைக் குரல்
முடிவில் தீர்ப்பளித்தது
கனவு. ●

**“டி. கண்ணன்” <krishnaswamy164@gmail.com>**

இலங்கைப் பயணம்

# எதிர்பாராத சந்திப்புகளும் எதிர்பார்த்த சந்திப்புகளும்

அ.ராமசாமி

உள்ளூர்ப் பயணங்களை ஓரளவு முன்திட்டங்களோடு தொடங்கலாம். ஆனால், அயல் நாட்டுப் பயணங்களை முழுமையாக முன் திட்டங்களோடு தொடங்கமுடியாது. ஐந்து நாட்களில் முடிந்திருக்கக் கூடிய அண்மைய இலங்கைப் பயணத்தை இருபது நாட்களுக்குரியதாக விரிவுபடுத்தியதன் பின்னணியில் சந்திப்புகளே காரணிகளாக இருந்தன.

டிசம்பரில் இலங்கைக்கு வருகிறேன் எனச் சொன்னபோது முதலில் தொடர்புகொண்டவர்கள், 2016 இலங்கைப் பயணத்தில் என்னைச் சந்தித்த நாடகத்துறை மாணவர்கள்தான். அந்தப் பயணத்தில் மட்டக்களப்பு ஸ்ரீவிபுலானந்தா அழகியல் கற்கை நிறுவனத்தில் நடந்த நாடகப் பயிற்சிப்பட்டறைகளில் கலந்துகொண்ட மாணாக்கர்கள் இப்போது இலங்கையின் பல பள்ளிகளில் நாடக ஆசிரியர்களாக இருக்கிறார்கள். அங்கே நாடகத்தைச் சிறப்புப்பாடமாகப் படிப்பவர்களுக்கு அப்படியொரு வாய்ப்பு இருக்கிறது. அதேபோன்றதொரு வாய்ப்பை - இயல் இசை நாடகம் என்று பெருமையடித்துக்கொள்ளும் - தமிழ்நாட்டில் நாடகம் படிக்க வரும் மாணாக்கர்களுக்கு ஏற்படுத்த முடியவில்லை என்பதுதான் பெருஞ்சோகம். புதுச்சேரி மற்றும் தஞ்சைத்தமிழ்ப் பல்கலைக்கழக நாடகத்துறைகளின் வீழ்ச்சியில் அந்தப் பெருஞ்சோகம் இருக்கிறது.



முன்பிருந்தே மலையகப் பகுதிக்கு நாடக, இலக்கிய ஆளுமைகளை அழைத்துச் செல்லவேண்டுமென விரும்பியவர் மலையகத்தைச் சேர்ந்த வி.சுதர்சன். தேசியக் கலை இலக்கியப் பேரவையின் உதவியோடு நுவரெலியாவிலும் ராகலையிலும் நாடகம் தொடர்பான நிகழ்வுகளை ஏற்பாடு செய்தார். அத்தோடு கொழும்பில் செயற்பாட்டாளராகவும் ஊடகவியலாளராகவும் செயல்படும் ஷாமிலா முஸ்டீன் ஒருங்கிணைப்பு வழியாக யாழ்ப்பாணத்தில் செயல்படும் தேசிய கலை இலக்கியப் பேரவையும் தொடர்புகொண்டது. அரசுத்துறைப் பண்பாட்டு அமைப்பில் பணியாற்றும் யாழினி யோகேஸ்வரன் வழியாகத் தேசியக் கலை இலக்கியப் பேரவையின் அமைப்பாளர் சீலன் அந்தப் பயிலரங்கையும் கருத்தரங்கையும் ஏற்பாடு செய்தார். மூன்றாவது நாடகப்பட்டறை, கவியும் எழுத்தாளருமான மன்னார் அமுதனின் ஏற்பாடு. மன்னார் தமிழ்ச்சங்கத்தலைவர் தமிழ்நேசன் ஒருங்கிணைப்பு செய்தார்.

இம்மூன்று பட்டறைகளிலும் முறையே 38, 37, 35 என்ற எண்ணிக்கையில் பங்கேற்றனர். பங்கேற்றவர்களில் மலையகத்தில் பங்கேற்ற ஒன்றிரண்டு பேர்கள் மட்டுமே ஏற்கெனவே அறிமுகமானவர்கள். மற்றவர்கள் அனைவரும் புதியவர்கள்.

இதுபோன்ற வெளிநாட்டுப் பயணங்களில் மட்டுமல்ல; தமிழக/இந்தியப் பரப்பிலும்கூட ஒற்றை இலக்குடைய பயணங்களை நான் திட்டமிடுவதில்லை. இந்தப் பயணத்திலும் நாடகம், புலம்பெயர் இலக்கியம், போர்க்கால இலக்கியம், வரலாறு பற்றிய நமது புரிதல்கள், ஸ்ரீவிபுலானந்தர், தி.வை. தாமோதரம்பிள்ளை போன்ற ஆளுமைகளைக் குறித்த உரை எனப் பல வேலைகளோடு ஊர் சுற்றுதலையும் மனிதர்களைச் சந்திப்பதையும் இலக்காக்கியே பயணத் திட்டத்தை உருவாக்கினேன். முடிந்தவரை சில கிராமங்களையும் மலையகத்தின் தோட்ட வீடுகளையும் பார்க்க நினைத்திருந்தேன்.

நமது புலன்களில் அதிகம் வேலை செய்ய வேண்டிய புலன்களில் கண்களுக்குத்தான் முதலிடம் என்றாலும், பயணத்தை விரும்பும் ஒருவருக்கு எல்லாவகையான பயணங்களின் போதும் ஐம்புலன்களும் போட்டி போட்டுக் கொண்டு வேலை செய்தாக வேண்டும். பார்ப்பதும் பரவசம் அடைவதும் கண்களின் வேலையாக இருக்கிறது. அதைவிடப் பரவசம் அடையச் செய்யும் புலனாக இருக்கக் கூடியன செவிகள்.

பயணங்களில் காணும் நிலக்காட்சிகளோடு ஏற்கெனவே அறிந்த நண்பர்களையும் உறவினர்களையும் சந்திப்பதைத் தாண்டி, அதுவரை பார்க்காதவர்களைச் சந்தித்துப் பேசும் வாய்ப்புகள் ஏற்படுத்தும் தருணங்கள் மறக்கமுடியாதவை ஆகிவிடும். புதிய சந்திப்புகள் புதிய நட்புகளாக மாறித் தொடரும்போது இன்னொரு உலகம் விரியும். இன்னும் சில பயணங்கள் கைகூடும்.

நிலக்காட்சிகளைப் பார்ப்பதைவிட மனிதர்களை சந்திப்பதும் அவர்களோடு உரையாடுவதும், அவர்கள் சொல்வதைக் கேட்பதும் முக்கியம் என நினைக்கும் பயணங்கள் என்னுடையவை. சந்திப்புகள் பலவிதமானவை. சில சந்திப்புகள் திட்டமிட்டுக்கொண்டு சந்திப்பவை; சில சந்திப்புகள் எதிர்பார்க்காமல் நடக்கும் சந்திப்புகள்.




எதிர்பாராத சந்திப்புகள்

இதற்கு முன்பு சந்திக்காது, இந்தப் பயணத்தில் சந்தித்தவர்கள் எனப் பார்த்தபோது முதலில் வந்து நிற்பவர் ‘போராளிகளின் காதலிகள்’ என்னும் நாவலை எழுதிய வெற்றிச் செல்வியே. தனது உடலில் போர்க்காலத்தின் அடையாளத்தோடு இருக்கும் அவரது மனத்துணிவும் நாடகப்பட்டறை பங்கேற்பும் ஆச்சரியமூட்டுபவை. சீலனின் ஏற்பாட்டில் யாழ்ப்பாணத்தில் நடந்த நாடகப்பட்டறையில் ஒருவராகக் கலந்துகொண்டார்.

அடுத்தநாள் நடந்த நாடகம் பற்றிய கலந்துரையாடலில் தமிழின் முக்கிய மார்க்சிய விமரிசகரான ந.ரவீந்திரனை சந்திக்க முடிந்தது. யாழ்ப்பாணப் பயணத்தின் நிறைவுநாளில் யாழ் பல்கலைக்கழக நாடகத்துறையின் தலைவர் ரதிநந்தனைச் சந்தித்தேன். அவரே அக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கினாலும் அங்கு பேசுவதற்கான முன்னெடுப்பைப் பாண்டிச்சேரி பல்கலைக்கழக நாடகத்துறை மாணவியும் இப்போது அங்கு விரிவுரையாளருமான தவச்செல்வி செய்தார். அதே துறையில் பணியாற்றும் முனைவர் க.சிதம்பரநாதனையும் அவரது மனைவி பத்மினியையும் (முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர்) அவரது பண்பாட்டு மலர்ச்சிக்கூடத்தில் அவரது குழுவினரோடு சந்தித்து இரவு உணவோடு களித்திருந்தேன்.

போர்க்காலத்தின் மாயவிளையாட்டுகளைத் தாண்டி மறுபிறவி எடுத்துத் திரும்பியிருக்கும் ராதிகா பத்மநாதனையும், மூத்த போராளியும் எழுத்துக்காரருமான தமிழ்க்கவியையும் கிளிநொச்சியில் சந்தித்தேன். விடுதலைப்புலிகளின் தலைமையோடும் படையணிகளோடும் நீண்டகாலத்தொடர்பில் இருந்த தமிழ்க்கவியைப் பற்றித் தனியாகச் சொல்ல வேண்டியதில்லை. அவரது ‘ஊழிக்காலம்’ நாவலை வாசித்தவர்கள் அவரை அறிவார்கள்.

ராதிகா பத்மநாதன், தன்னுடைய வாழ்க்கையைத் தமிழில் எழுதியிருக்கிறார். ‘என்னை நான் தேடுகின்றேன் வெளிச்சம் என்னும் இருளில்’ என்ற அந்த நூல் ஆங்கிலத்திலும் சிங்களத்திலும் மொழிபெயர்க்கப்பட்டு அரசின் கவனத்தைப் பெற்றிருக்கிறது. சந்திரிகா அம்மையாரின் கவனத்திற்குச் சென்ற அந்நூலின் வழியாக அவரது வாழ்க்கைப் பயணம் இப்போது திசைமாறியிருக்கிறது.

சிங்கள நாவலாசிரியரும் இதழாளருமான கத்யானா அமரசிங்கவைக் கொழும்பில் ஊருக்குக் கிளம்பிக் கொண்டிருந்த போது சந்திக்க முடிந்தது. அச்சந்திப்புக்கு ஏற்பாடு செய்தவர் ‘கூர்வாளின் நிழலில்’ எழுதிய தமிழினியின் கணவர் ஜெயன் தேவா. அவரது நாவலொன்று அச்சாகவிருக்கிறது.

வவுனியாவில் இளைஞர்களைத் திரட்டி மாற்றுச் சிந்தனைகள் பக்கம் திருப்பிக் கொண்டிருக்கும் இளைய அறிவியலாளர்கள் மருத்துவர் மதுரகன் செல்வராஜாவும், வேளாண்மைத் துறை அதிகாரி கிருபாநந்தன் குமரனும் புத்தம் புதிய அறிமுகங்கள். இவர்கள் இருவரும் என்னை எனது எழுத்துகளின் வழியாக மட்டுமே அறிந்தவர்கள். எனது கட்டுரைகள் வழியாக அறிந்து அழைத்து பேசவைத்தனர். வழக்கமான உரைகளைவிட்டு விலகி ‘தமிழ்ச் சமூக வரலாற்றைப் புரிந்துகொள்ளுதல்’ என்னும் புதிய பரப்பிற்குள் பேசச் சொன்னார்கள். மன்னாரில் தங்க வேண்டிய நாளையும் வவுனியாவிலேயே தங்கவைத்துக் கவனித்துக்கொண்டதோடு விரிவான உரையாடல்களை நடத்துவதற்கான தரவுகளோடு இருக்கிறார்கள். அவர்களின் செயல்பாடு எதிர்காலத்தின் மீது ஆக்கபூர்வமான நம்பிக்கையை ஏற்படுத்துகின்றன.

சென்ற ஆண்டு இலங்கை அரசின் விருதுப் போட்டியில் முதல் ஐந்திற்குள் இடம்பிடித்த ‘கட்டுபொல்’ நாவலை எழுதிய பிரமீளா பிரதீபன் இப்போது தொடர்ந்து சிறுகதைகளை எழுதிக் கொண்டிருக்கிறார். நான் சொல்லும் ஆலோசனைகளைக் கேட்டுக் கதைகளுக்கு வடிவம் உண்டாக்கும் ஆர்வம் கொண்டவர். காலே பகுதியிலிருந்து கொழும்புக்கு வந்து சந்தித்துவிட்டுப் போனார்.




மௌனகுருவுடன்



கருணாகரனுடன்

திருகோணமலையில் சந்தித்த அரசியல் விமர்சகர் யதீந்திராவோடு இதுதான் முதல் சந்திப்பு. மரபுக்கவி சிவசங்கரன், இளம்ஓவியக்காரி கிருஷ்ணா, நாடக ஆசிரியை காயத்திரி ஆகியோரும் திருகோணமலையில் சந்தித்த புத்தம் புதிய அறிமுகங்கள்.

கவிதையில் துவங்கிக் கதைக்குள் நுழைய எத்தணிக்கும் திலகா அழகு, மன்னார் அமுதன், பத்திரிகையாளர் முரளிதரன், 'செம்முகம்' நாடகக் குழுவின் பொறுப்பாளர் சீலன், ஊடகத்துறையில் செயல்படும் கவி.மாதங்கி, கலைத்துறையில் பணியாற்றும் யாழினி யோகீஸ்வரன், யாழ். பல்கலைக்கழக ஆங்கிலத்துறை விரிவுரையாளர் ரியோபிள்ளை போன்ற பெயர்கள் அறிமுகமான பெயர்கள்; நேர்ச் சந்திப்பும் உரையாடல்களும் இப்போதுதான். இவர்களோடு. முகநூல் வழியாக உரையாடியதால் புதிய சந்திப்புகளாகத் தோன்றவில்லை.

## எதிர்பார்த்த சந்திப்புகள்

எதிர்பாராத சந்திப்புகளைப் போலவே எதிர்பார்த்துச் சந்தித்து உரையாடி மகிழ்ந்த பேச்சுகளும் நினைத்துக்கொள்ள வேண்டியவைதான். திரும்பத் திரும்ப போனாலும் அவர்களைப் பார்க்கவேண்டும் என்றே தோன்றும். பயணத்திட்டத்தில் முதல் இடம் திருகோணமலை என்று உறுதிசெய்யப்பட்டது. தொடக்கநிலைத் திட்டமிடல் பின்னர் மாறியது. அங்கிருந்து சுகுமாரின் சொந்த ஊரான சேனையூர். இவ்விரு ஊர்களிலும் ஒருவரையும் முன்னறிமுகம் கிடையாது. முகநூல் வழியாகக் கூட அப்பகுதியிலிருந்து அறிமுகமானவர்கள் இல்லை. அங்கிருந்து மூன்று நாட்கள் கழித்தே அவர் பணியாற்றிய மட்டக்களப்பு.

சென்ற முறை மட்டகளப்பு போனபோது ஏழு நாட்கள் இருந்ததால் அங்கு பலரையும் தெரியும். விபுலானந்தர் அழகியல் கற்கை நிறுவகத்தின் ஆசிரியர்களும் மாணவர்களும் இணையம் வழியாகத் தொடர்பில் இருக்கிறார்கள். மாணாக்கர்களுக்கு அப்போது பயிற்சியும் பாடமும் நடத்தியதால் அதனை இணையம் வழியே தொடர்கிறேன்.

எஸ்.எல்.எம். ஹனிபா மட்டக்களப்பு வாசி யில்லையென்றாலும் அவரது அடையாளம் மட்டக்களப்பாகவே பதிவாகியிருக்கிறது. அவரது ஊரான ஓட்டுமாவடி, மட்டக்களப்புக்குப் போகும் பாதையில்தான் இருக்கிறது. பயணத்தின் இடையில் ஒருமணி நேரம் அவர் வீட்டில் .

மட்டக்களப்பின் அழகுகளில் ஒன்று அதனை இரண்டாகப் பிரித்து நீர்ப்பரப்புக்குள் இருக்கும் நகரமாக மாற்றும் வாவிக்கரை. மீன்பாடும் ஊர் அது. வாவிக்கரையோரம் இருக்கும் மோகனதாசன் (ஸ்ரீ விபுலானந்தா அழகியல் கற்கை நிறுவன சிரேஷ்ட விரிவுரையாளர்) வீட்டில் தங்கியிருந்தேன்.

நான் மதிக்கும் ஆளுமைகளான - பெண்ணிய



எம்.ஏ. நுஃமானுடன்

ஆளுமை சித்திரலேகா, அவரது கணவரான நாடகாளுமை மௌனகுரு, பேராசிரியர் யோகராஜா, எஸ்.எல்.எம். ஹனீபா, பெரும் வாசிப்பாளர் சிவலிங்கம் எனச் சேர்ந்து விவசாயம், அரங்கியல், இலக்கியம், கல்வி, இந்திய அரசியலும் இலங்கையின் சிக்கல்களும் என ஒன்றைத்தொட்டு ஒன்றாக விரிந்த பேச்சாக மாறியது.பேச்சு நடந்து கொண்டிருக்கும்போதே மோஹனதாசனும் அவரது மனைவி தர்மினியும் சேர்ந்து புட்டும் சாம்பாரும் சொதியுமாக நல்லதொரு உணவைத் தயாரித்து விட்டார்கள்.

இலங்கையின் அரசியல், எழுத்து, தகவல் என நினைத்தவுடன் நினைவுக்கு வரும் பெயர் கவி. கருணாகரன். அரசியலில் அனைத்து இயக்கங்களையும் அதன் நோக்கங்களையும் அறிந்தவர். விடுதலைபுலிகளின் 'வெளிச்சம்' தொலைக்காட்சி நிலையத்தின் நிகழ்ச்சிகள் பொறுப்பாளராக இருந்த அவர் சூழலைச் சரியாக விளக்கக்கூடிய அரசியல் எழுத்தாளர். நீண்ட காலமாக தொடர்பில் இருப்பவர். எந்த நிலையிலும் புலம்பெயர்தலைத் தவிர்த்துக்கொண்டு தங்கிவிட்டவர். போனதடவைப் பயணத்தில் இரண்டு நாட்கள் அவர் வீட்டில்தான் இருந்தேன்.இந்த முறையும் ஓரிரவையும் இரண்டு பகல்களையும் அவரோடும் அவரது அழைப்பின்பேரில் வந்த எழுத்தாளர்கள்/ செயல்பாட்டாளர்களோடும் கழிக்க முடிந்தது. அந்த இரவு 2019ஆம் ஆண்டின் கடைசி இரவு. அடுத்து வந்திருக்கும் 2020 இன் முதல் பகல்.

கண்டியில் வசிக்கும் பேரா. நுஃமான் திறனாய்வு சார்ந்த முன்னோடி. பேராதனைப் பல்கலைக்கழகத்தில் இருக்கும் ஆசிரியர்களும் கல்விப்புல நட்புகள். சபரகமுவவில் பணியாற்றும் கவி லறீனா முன்பே நன்கு அறிமுகமானவர். மலையகத்தில் பட்டறையை ஒழுங்கு செய்த சுதர்சன் மட்டக்களப்பில் மாணவராக இருந்து இப்போது பள்ளி ஆசிரியர்.

யாழ்ப்பாணத்தில் சந்திக்க நினைத்து முடியாமல் போன ஒருவர் நாடக முன்னோடி குழந்தை ம. சண்முகலிங்கன்.இன்னொருவர் பருத்தித்துறையில் இருக்கும் குலசேகரம். உடல் நலமின்றி இருக்கிறார்கள் என்ற நிலையில் சந்திப்பைத் தவிர்த்துவிட்டேன். ஒன்றிரண்டு முறை தமிழ்நாட்டில் சந்தித்த மார்க்சியத் திறனாய்வாளர் ந. ரவீந்திரன் இந்தமுறை யாழ்ப்பாணத்தில் வைத்துச் சந்திக்க முடிந்தது. சிறுகதை எழுத்தாளர் சர்மிளா விநோதினி, சென்னையில் சந்தித்தவர். இப்போது தொலைக்காட்சி நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளராக இருக்கிறார்.

நீண்ட கால அகதி வாழ்க்கையை இந்தியாவில்/ தமிழகத்தில் கழித்துவிட்டுத் தாயகம் திரும்பியுள்ள தொ. பத்திநாதன் மன்னாருக்கு வந்தார். அவரது சொந்த ஊர் அந்தப் பகுதியில் இருப்பதாகச் சொன்னார். அவ்வப்போது புத்தகச் சந்தைகளில் காலச்சுவடுவின் விற்பனையாளராகப் பார்த்து பழகியவர். அவரைத் திரும்பவும் தாயகத்தில் சந்தித்து இப்போதைய நிலையை அறிந்தது மனசுக்கு வலியாக இருந்தது.

மொத்தமாக இந்த இருபது நாள் பயணத்திலும் உடனிருந்து கவனிப்பதுபோல, தொலைபேசி வழியாகக் கேட்டுக்கொண்டும் அறிமுகங்களை ஏற்படுத்தித் தந்தும் துணையாக நின்றவர்கள் முஸ்டீனும் அவரது மனைவி ஷாமிலாவும். அதைவிடவும் தனது மழலைக் குரலில் தொலைபேசியில், "ப்ரொபஸர்.. ராமசாமீ" எனத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருக்கும் சீனத் நினைவை விட்டகலாத முகங்கள். ●

"அ. ராமசாமி" <ramasamytamil@gmail.com>

# புத்துயிர்ப்பு

**கன்பரா யோகன்**

ஓவியம்: **ரம்யா சதாசிவம்**

“மூன்றரை லட்சம் கிலோமீட்டர் ஓடிவிட்டது.”

“ஓயில் லீக் இப்படி வேறு எதாவது மேஜர் பிரச்சினைகள் இருக்குதா?”

“ஒன்றுமில்லை. சின்ன சின்ன எலக்ட்ரிக்கல் பிரச்சினைகள்தான்.”

நான் புதிதாக கண்டுபிடித்த மெக்கானிக்கிடம் காரின் வியாதிகளை ஓரளவு குறைத்தே சொல்ல வேண்டியிருந்தது. பழைய கார்களில் கை வைப்பதற்கு இங்கே எவரும் அதிகம் விரும்பார்.

டிரைவர் பக்கமுள்ள சுவிட்ச்சில் இயங்கும் கார் யன்னல் கண்ணாடியைத் காற்று வருவதற்காக திறந்தால் பிறகு மூடும்போது அது விக்கி விக்கி கால்வாசியில் நின்றுவிடும். மூடுவதற்கு தானாக மூட் வந்து, அது விரும்பிய நேரத்திலே முழுவதுமாய் மூடுவதற்கிடையில் வீடு வந்து சேர்ந்துவிடும். மறந்தும் யன்னலைத் திறந்துவிடாதபடி இப்போது என்னைப் பழக்கப்படுத்திக் கொண்டேன்.

இதனால் நான் பார்க்கிங் டிக்கட் மெஷினிலிருந்து டிக்கற்றை எடுப்பதற்கும் இப்போது கார் கதவைத் திறக்க வேண்டியிருக்கிறது.

பின்னால் நிற்பவர்களுக்கு இதை காட்டக் கூடாதென்பதற்காக தவறுதலாக டிக்கட் மெஷினை கடந்து நிறுத்துவது போலவும், பின்னர் மிஷினை யன்னல் வழியே எட்ட முடியாமல்தான் கதவை திறப்பது போலவும் நடிக்கப் பழகிவிட்டேன்.



ஓரிரு முறை பார்க்கிங்கில் நிறுத்தி வைத்துவிட்டு குறுஞ்செய்தி பார்த்துக் கொண்டிருக்கையில் அறிந்தவர் கண்டு காருக்கருகில் வந்து யன்னலில் தட்டி தெரியப்படுத்த, நான் அதைத் திறக்காமல் கதவைத் திறந்துகொண்டு இறங்கி வந்ததை நான் அவர்களுக்கு அளித்த மரியாதை என்றே எண்ணியிருந்திருப்பர்.

இதன் பிறகு ஒரு கட்டத்தில் கார் டாஷ் போட்டிலுள்ள பெருமளவு விளக்குகள் எரியாது நின்றுவிட்டன. இதனால் இரவில் கார் ஓடுவது கள்ளத்தோணி ஓட்டுவது போலாகிவிட்டது.

இதைவிட முக்கியமான இன்னொன்று இடது கால் தொடைக்குப் பக்கத்திலிருக்கும் பார்க் பிறேக் வெளிச்சமும் மறைந்து போன சோகம்தான். இதனால் இருட்டில் காரை பார்க்கிலிருந்து டிரைவுக்கு மாற்றுவதற்கு உதவியாக பொக்கற்றில் தயாராக ஒரு பென் டார்ச் வைத்திருந்தேன். கார் ஓட்டமற்றிக் ஆகவிருந்ததால் காரை எடுக்கும் போதும், நிறுத்தும் போதும் மட்டுமே டார்ச்சுக்கு வேலை. மனுவல் காராக இருந்திருந்தால் டார்ச்சை கயிற்றில் கட்டி கார்க் கூரையில் தொங்க விடவும் தயங்கியிருக்க மாட்டேன். கார்க் கூரை விளக்கும் வேலை செய்யவில்லை என்பது சொல்லாமலே உங்களுக்கு புரிந்திருக்கும். இப்படி தமிழகத்தில் வந்த களப்பிரர் காலம் போல எனது காருக்கும் இந்த இருண்ட காலம் வந்துவிட்டது.

இதெல்லாம் “சின்ன சின்ன எலக்ட்ரிக்கல் பிரச்சினைகள்தான்” என்று இப்போது மெக்கானிக்குக்கு சொன்னது போலவே உஷாவுக்கும் அடிக்கடி சொல்லி வந்தாலும் அவள் இதை நம்ப தயாராகவில்லை. புதிய, பெரிய கார் வாங்கும் படியாக அவள் அடாப் பிடியாக நின்றதன் காரணமே இப்போது திருத்தி விற்கும் படலத்தை ஆரம்பிப்பதற்கு என்னை தூண்டியது.

இதையும் வைத்துக்கொண்டு இன்னொன்றையும் வாங்கினால் ரெஜிஸ்ட்ரேஷன், இன்சூரன்ஸ் என்று இரட்டிப்பாக பணத்தை கொட்டிக் கொண்டிருக்க முடியுமா?

ஆனால், புதிய வருடத்திலாவது புதிய காரொன்றை வாங்கிவிட வேண்டுமென்பதில் அவள் பிடிவாதமாகவிருந்தாள். சின்னக் காருக்குள் காலை மடக்கிக் கூனிக்கொண்டு இருந்து நாரிப் பிடிப்பு வந்துவிடுகிறது என்று அவள் சொல்வதென்னவோ உண்மையாக இருக்கலாம். அதனால், இருக்கிறதை விட்டுவிட்டு பறக்கிறதை பிடிக்க அலைய வேண்டுமா என்று வழமை போல என் சோம்பேறி மனம் பின்வாங்கியது. பெரிய கார்கள் பலவற்றினை எங்கள் உறவினர் பலர் வாங்கிவிட்டதை பார்த்தே இப்படி நச்சரிக்கிறாள் என்று எண்ணிக்கொண்டேன்.

எனக்கும் நாரிப் பிடிப்பு இருக்கிறதுதான், ஆனால் எனக்கு காரில் உட்கார்ந்தால் முதுகு நன்றாகத்தானே இருக்கிறது என்று பொய் சொன்னேன். இரகசியமாக டிரைவர் சீட் கவரின் உள்ளே பஞ்சுத் தலையணை



ஒன்றை வைத்து உயர்த்தியிருந்ததை அவளுக்கு சொல்வேனா என்ன?

ஆனாலும் அப்படி என்ன குறைந்துவிட்டது எனது டொயோட்டாக் காருக்கு?

மனக் குரங்கு சும்மா விடவில்லை.

கோடை காலத்தில் காரின் குளிரூட்டி சொன்ன மாதிரியே வேலை செய்கிறது. குளிர் காலத்தில் ஸ்டார்ட்டுக்கு எந்த தொல்லையுமில்லை. காரை விட்ட இடத்தில் உற்று பார்த்தால் தரை எவ்வித ஓயில், தண்ணீர் ஒழுக்குமில்லாது பளிச்சென்று துப்பரவாகவிருக்கிறது. எஞ்சினோ வயதேறிய எந்தக் கவலையுமில்லாது தன் பாட்டுக்கு ஓடிக்கொண்டிருக்கிறது. அதுவும் பதினைந்து வருடங்களாக விலை குறைந்த பெற்றோலைக் குடித்துக் கொண்டுதானே? டொயோட்டா ஒரு நல்ல நாய் போல ஒரு போதும் எஜமானனை கைவிட்டு விடாது என்று பெரும்பாலான இலங்கை, இந்தியர்கள் நம்பி வாங்குவதால் டொயோட்டாவுக்கு கறி கார் என்ற கௌரவ பட்டமும் இங்கே இருக்கிறதல்லவா?.

இருந்தாலும் கொஞ்ச காலமாக காரின் தோற்றம் சற்று வாடிப் போய்விட்டது என்னவோ உண்மைதான். காரணம் இப்போது எனது காரை கராஜுக்குள் பார்க் பண்ண முடியவில்லை. பிள்ளைகள் சுகந்தனதும் சிந்தியாவினதும் புதிய ஹோண்டா கார்கள் வந்து சேர, வயதேறிய குற்றத்துக்காக எனது டொயோட்டா வெளியே டிரைவ் வேயில் நிற்கிறது. பதினைந்து வருடமாய் கராஜ்ஜில் அனுபவித்த வந்த சீவிய உரித்தை என் கார் இழந்ததனால் இரவு பகலாக வெளியே நின்று வெயில், குளிர், புழுதி குளித்து சோபையிழந்த கோலத்துக்கு வந்துவிட்டது.

அதுவும் அண்மையில் இங்கே அடித்து வரும் செம்மண் புழுதியொன்றும் மற்றும் காட்டுத்தீயின் சாம்பலும் அதன் தோற்றத்தை ஒரு கிழட்டுத் தோட்டக்காரனைப் போல மாற்றிவிட்டது.

தெருக்கரையில் நின்ற, பெயர் தெரியாத,

அரசாங்கம் நட்டு வைத்த நிழல் மரமொன்றின் கீழே நிறுத்தினால் கோடை காலத்தில் காருள்ளே குளிமையாகவிருக்குமென்று பார்த்தால் மரத்தில் வந்தமரும் மக்பைகளின் எச்சம் கண்ணாடிகளிலும் காரின் உடலெங்கும் வெள்ளையாக கோடிழுத்துக் காய்ந்துஇறுகியிருக்கிறது.இந்தகோடை காலத்தில்தான் தண்ணீரை பீச்சியடித்துக் காரை கழுவ முடியாத சட்டமும் வந்தது. சேர்வீஸ் நிலையங்களில் இருபது டொலர்களைக் கொடுத்து ஸ்பாவில் கார் கழுவ என் மனம் ஒப்பவில்லை.

ஆனாலும், எப்படியோ ஆயிரம் டொலருக்காவது விற்றுவிடலாம் என்ற பேராசையில்தான் மெக்கானிக்கிடம் போனேன். இந்த எலக்ட்ரிக்கல் பிரச்சினைகளை திருத்தாமல் விற்றுவிட முடியாது.

ஆயிரம் டொலருக்காக நீ அதற்கும் மேலாக மெக்கானிக்கிடம் தாரை வார்க்கப் போகிறாய் என்று ஒரு நண்பன் எச்சரித்தான். அதனாலேயே வழமையானவனை விட்டுப் புதிய மெக்கானிக்குக்கு போன் அடித்தேன். புதிய வாடிக்கையாளன் என்றால் மெக்கானிக் விலை குறைத்துச் சொல்வான் என்ற நம்பிக்கைதான். அதைவிட இவன் பழைய கார்களையும் திருத்துகிறான் என்று ஒரு சிறிய துப்புக் கிடைத்ததும் இன்னொரு காரணம்.

ஆனால், இந்தப் புதிய மெக்கானிக்கும் கையை விரித்துவிட்டு சொன்ன காரணம் நண்பன் ஏற்கனவே சொன்னதுதான். எலக்ரிக்கல் பார்ட்ஸின் விலையும் வேலைக்கு கூலியும் அதிகமாம்.

“நொட் வேர்த் இட்” என்று மூன்று சொல்லில் முடிவு சொன்னான்.

இதே மாதிரியான சொற்களை அண்மையில் எங்கோ கேட்டிருக்கிறேனே என்று நினைவடுக்குகளை துழாவிப் பார்த்தேன்.

அது அம்மாவின் டாக்டர் சொன்ன வசனங்கள். அம்மாவுக்கும் ஹார்ட் பிரச்சினை, சுகர் பிரச்சினை, பிரஷர் என்று மேஜர் பிரச்சினைகள் ஒன்றும் இருக்கவில்லை. ஆனால், சுகதேகியாக இருந்தாலும் முதுமைமையில் வாழ்வு முடிவுக்கு வரத்தானே வேண்டும்? அது எப்படி முடிவுக்கு வருகிறது என்பதுதான் எனக்கு தெரியாத அனுபவம்.

காருக்கு அவ்வப்போது வந்த சின்னப் பிரச்சினைகள் போலத்தான் அம்மாவுக்கு முதுமை சில உடற் குறைகளை கொண்டுவந்தது. காரின் உள் விளக்குகள் அணைந்ததுபோல நினைவுகள் மங்கி மறைந்தன. யன்னலை உயர்த்தி மூட முடியாதது போலவே கை, கால்களை நினைத்தபடி அசைக்க முடியாது போயிற்று.

‘நொட் வேர்த் இட்’ என்பதற்கு சமானமான ஒரு ஆங்கிலத்தொடரையே டாக்டர்களும் சொன்னார்கள். தொண்ணூற்றி மூன்று வயதில் வைத்தியம் பார்த்துப் பலனில்லை.

இரு வெவ்வேறான அனுபவங்களுக்கிடையே இப்படி ஒரு ஒற்றுமை.

டிசம்பரிலேயே கோடை வறுத்தெடுக்க ஆரம்பித்துவிட்டது. மலைகள் சூழ்ந்த பகுதியின் நடுவே இருந்த எமது பள்ளத்தாக்கினை சூழ யூகலிப்டஸ் மரங்கள் எரியும் காட்டுத் தீயின் சுவாலைகள் எம்மை நெருங்கி வந்தன.

மலைக்குப் பின்னாலிருந்து எழுந்து வரும் புகை மென்னீல வானத்தில் நிரந்தரமாக சாம்பல் சாயம் பூசிவிட்டது. நீண்ட நாட்களாகவே தெளிந்த நீல வானத்தை காண முடியவில்லை. சாம்பல் வானத்தில் சூரியன் ஓரஞ்சுப் பழ நிறத்தில் வெக்கையை நீண்ட பகல் முழுதும் பாய்ச்சி மரங்கள், புற்களைக் காய்வித்துக் கருக்கி, மண்ணை வறுக்கிறான்.

காட்டுத் தீயின் புகைச் சுவாசம் உஷாவுக்கு ஏற்கனவே இருந்த அஸ்மாவை தீவிரப் படுத்திவிடுமோ என்று பயந்தோம். புகையை வடிகட்டி எடுக்கும் விசேட மாஸ்குகளைப் போட்டாலன்றி காற்றிலே கலந்திருக்கும் கார்பன், நைதரசன் வாயுக்களையும் சாம்பல் துகள்களையும் சுவாசிப்பது நுரையீரலுக்கு கெடுதலாகவே அமையும்.

எமது துரதிஷ்டம் அன்று நான் சென்ற கடைகளிலெல்லாம் அந்த மாஸ்குகள் தீர்ந்து போய்விட்டன. இதனால் வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்தோம். அன்று பகல் வெப்பநிலை நாற்பத்தைத்தைத் தொட்டது. அதிகாலையில் வந்த ரேடியோ அறி விப்பில் அன்று பின்னிரவில் வீசவிருக்கும் காற்று எம் குடியிருப்புகளை நோக்கி திசை திரும்புவதாயும், காட்டுத்தீ ஒரு வேளை வீடுகளை விழுங்கக்கூடும் என அபாயத்தை முன் கூட்டியே எச்சரித்தார்கள்.

உஷா அன்று மதியமே எழுநூறு கிலோ மீட்டர்களுகப்பாலுள்ள மெல்பெணுக்குப் போக விரும்பினாள். அவளது நெருங்கிய உறவுக்காரர் அங்கே யிருந்தனர். நாங்கள் மூன்று காரிலும் முக்கியமான பொருட்களை ஏற்றினோம். உஷாவின் உடுப்புகளே என் காரைப் பெருமளவு நிறைத்துவிட்டன. இந்த அமளியில் புதிய கார் பற்றிய நினைப்பு அவளுக்கு எங்கே வரமுடியும்? அவள் பொதுவாகவே உடுப்புகளை எறியாமல் சேர்த்து வைத்திருப்பது எனக்கு எரிச்சலைத் தருவது. அதுவும் இந்த நேரத்தில் சொல்லவா வேண்டும்? சிந்தியா தனது சப்பாத்துக்களால் அவள் காரை நிரப்பினாள். எஞ்சியது சுகந்தனின் கார்தான்.

எதையோ எடுக்க மறந்ததை உள்ளே போய் எடுத்து வந்து வெளியே பார்க்கையில் தெருவோரத்தில் புறப்படுவதற்குத் தயாராக நின்ற காரின் சக்கரங்களை எட்டி உதைத்து கொண்டிருந்த சுகந்தனைக் கண்டு விதிர் விதிர்த்துப் போன நான், “சில்லுக்குக் காற்றுப் போய் விட்டதா என்ன” என்று கேட்க, “காற்றுப் போனால் சில்லை மாற்ற மாட்டேனா? எஞ்சின் ஸ்ட்ரார்ட் ஆகுதில்லை” என்றான் கோபத்துடன்.

அவன் கோபம் வந்தால் காரையும் அறைக் கதவையும் உதைப்பவன். காரின் உள்ளே பார்த்தால் எஞ்சின் சிவப்பு எச்சரிக்கை விளக்கு டாஷ் போட்டிலிருந்து வருகிறது.

இனி இதை திருத்தவோ தள்ளி உள்ளே விடவோ நேரமில்லை, சுகந்தனின் காரை விட்டுவிட்டு போவதாக முடிவெடுத்தோம். இப்போது எனது காரைத் தெருவுக்கு

எடுக்க, சுகந்தனின் ஹோண்டாவைப் பார்த்து அது இளக்காரமாகச் சிரித்தது எனக்கு மட்டுமே கேட்டது. என் காரின் ஸ்டார்ட் சத்தம் அப்படி.

தெருவில் பகலிலும் கார் விளக்குகளை போட்டு வட்டு ஓட்டுமளவுக்கு முன்னூறு மீற்றருக்கப்பால் எல்லாம் மூடி மறைத்துவிட்ட புகையை கடந்து சீறிக் கொண்டு சென்றது எனது கார். தகிக்கும் அந்த கோடையில் ஏசியும் போட்டபடி எழுநூறு கிலோமீட்டரையும் அது ஓடிக் கடக்க வேண்டியிருந்தது. பின்னால் சிந்தியாவின் கார் தொடர்ந்தது.

அன்று தீ நாக்குகள் வீடுகளை ருசி பார்க்கா வண்ணம் தீயணைப்புப் படையினர் கவசமாய் நின்று காத்ததனால் எமது நகரம் தப்பியது. சில வாரங்களின் பின் வெயிலின் கோரம் தணிந்து, புகையும் அடங்கி, வானம் தெளிந்த ஒரு நாளில் மீண்டும் வீட்டுக்கு வந்தோம்.

பல நாட்களாக அப்பகுதியெங்கும் பறந்த தீயின் சாம்பலும், புழுதியும் படிந்து ஒரு கிழட்டுத் தோட்டக்காரனைப் போல சுகந்தனின் ஹோண்டா அப்போதும் வெளியே நின்றது

பதவியிழந்த எம்பி மீண்டும் தேர்தலில் வென்று பாராளுமன்றம் வருவது போல எனது டொயோட்டா மீண்டும் பெற்ற புத்துயிர்ப்புடன் கராஜ்ஜின் உள்ளே வந்தது. ●

**யோகன் <solomonyoganantham@gmail.com>**

# டோரிஸ் லெஸ்ஸிங்

## (1919 - 2013)

# சமரசங்களை மறுத்து எழுந்த வியக்தி

## ஸிந்துஜா

காரை விட்டு இறங்கி அடியெடுத்து வைக்க அந்தப் பெண்மணி சிரமப்பட்டாள். அவள் வயதானவளாய் இருந்ததாலும், டாக்சி நின்ற இடத்துக்கு வெகு கீழே தரை இருந்ததாலும் இந்தச் சிரமம் ஏற்பட்டிருந்தது. காரின் மேல்பகுதி மீது தலை இடித்து விடக்கூடாது என்று அவள் கவனமாக மிகவும் குனிந்து இறங்க முயற்சிக்கையில் அவள் கழுத்தில் சுருட்டியிருந்த நீண்ட ஸ்கார்ஃப் கீழே சரிந்து தரையைத் தொட முயன்றது. அவள் வயதானவளாக மட்டுமில்லாது குட்டையாகவும் இருந்தாள். அவளது வெள்ளைக்கேசம் பின் பக்கம் வாரிக் கட்டப்பட்டிருக்க, விறைப்பான கணுக்கால்களை ஸ்டாக்கிங்குகள் மூடியிருந்தன. டாக்சியின் கதவைப் பிடித்துக்கொண்டு அவள் கீழே இறங்க முயற்சித்த போது டிரைவர் தன் சீட்டில் இருந்து எம்பி அவளுக்கு உதவ முயன்றான். ஆனால், அவள் அவன் கைகளுக்கு எட்டாத தூரத்தில் இருந்தாள். அவள் மெதுவாகக் காரை விட்டிறங்கி, வாடகை எவ்வளவு என்று டிரைவரிடம் கேட்டாள். அவளுடைய பாக்கெட்டில் கையை விட்டுப் பணத்தை எடுத்து நிமிர்ந்த போதுதான் முகத்துக்கு எதிரே இருந்த காமிராவைப் பார்த்தாள். 'என்ன இது போட்டோ?' என்ற அவள் கேள்விக்கு காமிராவின் பின்னால் இருந்த மனிதர் "உங்களைத்தான் போட்டோ எடுக்கிறோம்!" என்றார்.



பிறகு அவளுக்கு முன்னால் மைக்ரோபோனை நீட்டி "உங்களுக்கு நியூஸ் தெரியுமா?" என்று கேட்டார். "2007ஆம் ஆண்டின் இலக்கியத்துக்கான நோபல் பரிசு உங்களுக்கு கிடைத்திருக்கிறது!"

"ஓ கடவுளே!" என்றார் டோரிஸ் லெஸ்ஸிங்.

டோரிஸ் லெஸ்ஸிங் உலக மகா யுத்தத்துக்குப் பிந்திய கட்ட எழுத்தாளர்களில் மிக முக்கியமானவர். இருபதாம் நூற்றாண்டின் பிரச்சினைகளைக் கவனித்து அவரது எழுத்து கட்டமைக்கப்பட்டது. அவரது ஆரம்ப கால நாவல்கள் - ஆப்பிரிக்காவைச் சுற்றி எழுப்பப்பட்டன - சமூகத்தில் ஆழப் பதிந்திருந்த நிறவெறி அரசியலுக்கு எதிராக எழுந்தவை. பின்னர் எழுபதுகளிலும் எண்பதுகளிலும் எழுந்த பாலியல் புரட்சியும் பெண் விடுதலை எழுச்சியும் அவரது எழுத்துக்களில் முக்கியத்துவம் பெற்றன. பெண் விடுதலை இயக்கத்தில் அவர் முழு மூச்சுடன் இறங்கி இயங்கினார்.

"வன்முறையின் குழந்தைகள்" என்னும் அவரது தொடர் எழுத்தில் குடும்பச் சூழலில் கட்டிப் போடும் உறவு முறைகளை எதிர்த்து எழுதினார். கம்யூனிசத்தில் அச்சமயம் மிகுந்த ஈடுபாடு கொண்டார். அவரது நாவல்கள் தொடர் சுயசரிதையை அடக்கி வெளிவந்தன. தொடரின் முதல் நாவலில் கதாநாயகி மார்த்தா க்வெஸ்ட் அவளுடைய தாயின் வாழ்க்கையைப் பார்த்துவிட்டுத் தனக்குத் திருமணமே வேண்டாம் என்கிறாள். ஆனால், அவளுக்கு இளம் வயதிலேயே திருமணம் நிகழ்ந்து விடுகிறது. இரண்டாவது நாவலில், திருமண வாழ்க்கையில் அவள் அடையும் ஏமாற்றங்களால் மார்த்தா திருமண பந்தத்திலிருந்து விடுபட்டு வெளியே வந்துவிடுகிறாள். மூன்றாவது நாவல் முழுக்க முழுக்க மார்த்தாவின் எண்ண ஓட்டமும் தீர்மானங்களும்தான். மார்க்ஸீயத்தின் மீது மார்த்தா கொள்ளும் ஈடுபாட்டையும் அவளது அரசியல் பிரவேசத்தையும் நாவல் விவரிக்கிறது. இந்த நாவலை லெஸ்ஸிங் முடிக்கும் போது நிஜ வாழ்க்கையில் அவர் கம்யூனிசத்தின் மேல் நம்பிக்கை இழந்து கட்சியை விட்டு வெளியேறி விட்டார்.

லெஸ்ஸிங்கின் உலகப் புகழ்பெற்ற 'தி கோல்டன் நோட்புக்' நாவலை 1962இல் எழுதினர். பெண் விடுதலை, நிறவெறி எதிர்ப்பு ஆகிய 'எரிக்கும் பிரச்சினை'களை இந்த நாவல் தீர்க்கமாகப் பரிசீலித்தது. அன்றைய வளர்ந்து வந்த (இளம்) பெண் எழுத்தாளர்களால் மிகவும் கொண்டாடப்பட்ட வியக்தியாக லெஸ்ஸிங் வலம் வந்தார். நாவலில் வரும் அன்னா உல்ஃப் ஒரு பெண் எழுத்தாளர். அவளது சொந்த வாழ்க்கையும், அவளுடைய கலைத் தாகமும் ஒன்றுக்கொன்று முரண்பட்டு செயலாற்றுவதை இந்நாவல் பரிசீலிக்கிறது. கதாநாயகியின் அபிப்பிராயத்தில் ஒரு பெண்ணின் வாழ்க்கை என்பது தனித் தனிப் பிரிவில் - பெண், காதலி, குடும்பத் தலைவி, எழுத்தாளர், அரசியல்வாதி என்று - இயங்குகிறது. இந்தப் பிரிவுகளினால் ஆன வாழ்க்கையை அவள் ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு வண்ண நோட்டுப் புத்தகம் எடுத்து வைத்துப் பதிவு செய்கிறாள். இந்த ஒவ்வொரு பிரிவிலும் வரையப்படும் அனுபவங்கள் அவளுடைய வாழ்க்கையிலிருந்தே எழுவது. இறுதியில் அன்னா உல்ஃப்புக்கு மனச் சோர்வு ஏற்படுகிறது.



இந்த மனச்சிதைவே அவளுக்கு அவளை யாரென்று அடையாளம் காட்ட அவள் உணரும் 'பரிபூரண நிலையை' கடைசி நோட்டுப் புத்தகத்தில் எழுதுகிறாள்.

இந்நாவலில் வரும் அன்னாவின் பாத்திரம் மூலம் லெஸ்ஸிங் தெரிவித்த கருத்துக்கள் மிகுந்த அதிர்ச்சி அலைகளை எழுப்பின. அன்னா ஓரிடத்தில், "ஒவ்வொரு பெண்ணும் அவளது ஆழ்மனதில் தனக்கு உடலுறவில் திருப்தி தராத கணவனை நிராகரித்து இன்னொருவருடன் உறவுகொள்வதைத் தனது உரிமையாக எண்ணுகிறாள்" என்று சொல்லுகிறாள்.

இந்த நாவலில் பெண்கள் சுய இன்பம் அனுபவிப்பதில் தவறு ஏதும் இல்லை என்று குறிப்பிடப்படுகிறது. அன்றிருந்த பெண்கள் இதழ்கள் தொடாத விஷயங்களை லெஸ்ஸிங் எடுத்தாள்கிறார். ஆர்கஸம் பற்றிய அன்னாவின் எண்ணங்கள் பல உதாரணங்களுடன், வாக்கு மூலங்களுடன், தீவிரங்களுடன் பேசுகின்றன. அறுபதுகளின் ஆரம்பத்தில் இத்தகைய எழுத்து அதிர்ச்சி அலைகளை எழுப்பியது.

இதற்குப் பிறகு லெஸ்ஸிங் எழுதிய இரு நாவல்களில் ஒன்றில் கதாநாயகன் அவனது சாதாரண வாழ்க்கையின் ஞாபகங்களை இழந்து லண்டன் தெருக்களில் சுற்றுகிறான். இன்னொரு நாவலில் கதாநாயகியின் மருத்துவர்கள் அவள் மனச்சிதைவால் பீடிக்கப்பட்டிருக்கிறாள் என்று தீர்மானிக்கையில், அவள் தனது அத்தகைய மனநிலையில் வாழ்வின் பரிபூரணத்தை உணருகிறாள்.

எழுபதுகளின் பிற்பகுதியில், எண்பதுகளின் ஆரம்பத்தில் லெஸ்ஸிங் ஃபேண்டஸி கதைகளையும், பல நாவலாசிரியர்கள் அன்று தொடத் தயங்கிய விஞ்ஞானக் கதைகளையும் எழுதினார். ஆனால், சிறிது காலம் கழித்து யதார்த்த நாவல்களை எழுதத் துவங்கிவிட்டார். அவற்றை ஜேன் சோமர்ஸ் என்னும் புனைப்பெயரில் பல பதிப்பாளர்களுக்கு அனுப்பினார். எல்லாம் திரும்பி வந்தன. மிகக் குறுகிய அளவில் அச்சடிக்கப்பட்ட பிரதிகளும் விற்கவில்லை. வந்த விமரிசனங்களில் ஒன்று, "ஆசிரியை டோரிஸ் லெஸ்ஸிங்கைப் போல எழுத முயன்றிருக்கிறார்" என்றது! ஆனால், அதன் பின் உண்மை வெளியே தெரிய வந்ததும், இரு புத்தகங்களும் பெருத்த அளவில் வாசக வரவேற்பைப் பெற்றன.

நோபல் பரிசுக்குப் பல வருடங்கள் டோரிஸ் லெஸ்ஸிங்கின் பெயர் பரிந்துரைக்கப்பட்டது. ஆனால், ஆரம்ப காலங்களில் நோபல் பரிசுக் கமிட்டி ஒரு நாளும் டோரிஸ் நோபல் பரிசை அடைய முடியாது என்று தெளிவாக்கியிருந்தது. அதனால்தான் பரிசு கிடைத்தது என்று சொன்ன நிருபர்களிடம் அவர் பேசுகையில், "இந்தப் பரிசு நயமற்றது; முட்டாள்தனமானது; மரியாதையை எழுப்ப இயலாதது" என்று கிண்டலாகக் கூறினார்.

நோபல் பரிசுக்கான அவரது உரை மிக வசீகரமானது; சிந்தனைச் செழிப்பையும் மானுட நேயத்தையும் பிரதிபலிக்கும் அவ்வுரை ஒரு சிறுகதையைப் போல் அமைந்திருப்பதை வாசகர்கள் காண முடியும். ●

# கிடைக்காத நோபல் பரிசு!

## (நோபல் விருது ஏற்புரை)

டோரிஸ் லெஸ்ஸிங்
தமிழில்: ஸிந்துஜா

இன்னும் சேதப்படுத்தபடாத அடர்த்தியான காடு அங்கே இருக்கிறது என்று சொல்லப்பட்ட இடத்தில் சுழன்றடிக்கும் புழுதிப் புயலைப் பார்த்தபடி நான் என் வீட்டு வாசலில் நின்று கொண்டிருக்கிறேன். துண்டிக்கப்பட்ட மரக்கட்டைகளை, தீயில் எரிந்தது போக நின்ற மிச்சங்களை நேற்று நான் காரில் வரும் போது பார்த்தேன். *1956*இல் அந்த இடத்தில் மரங்கள் செறிந்தடர்ந்த மிக அற்புதமான காடு இருந்தது. இப்போது அது அழிந்துவிட்டது. மனிதர்கள் உண்ண வேண்டியிருக்கிறது. அதற்காகத் தீ மூட்ட விறகுகள் எப்போதும் தேவைப்படுகின்றன.

இது எண்பதுகளின் ஆரம்பத்தில் இருக்கும் வடமேற்கு ஜிம்பாப்வேயின் சித்திரம். லண்டனில் ஆசிரியராக வேலை பார்த்த ஒரு சிநேகிதனைப் பார்க்க வந்திருக்கிறேன். அவன், "ஆப்பிரிக்காவுக்கு உதவ வேண்டும்" என்று இங்கே வந்திருக்கிறான். அவன் ஒரு மென்மையான லட்சியவாதி. ஆனால், அவன் இங்கே வந்து பள்ளி என்ற இடத்தில் கண்டவை அவனுக்கு மன அழுத்தத்தைக் கொடுத்துவிட்டது. இந்தப் பள்ளியும் சுதந்தரத்துக்குப் பிறகு கட்டப்பட்ட பள்ளிகளில் ஒன்று. செங்கல்களை வைத்து கட்டப்பட்ட நான்கு பெரிய அறைகள் அடுத்தடுத்து நின்றன. நான்காவது அறையின் முடிவில் ஒரு சிறிய பாதி அறை. அதுதான் நூலகம். இந்த வகுப்பறைகளில் கரும்பலகைகள் இருந்தன.

என் நண்பன் சாக்பீஸ்களை எப்போதும் தன் பாக்கெட்டுகளில் வைத்திருந்தான். வெளியில் வைத்தால் திருட்டுப் போய் விடுகின்றன. வகுப்பறையில் உலக உருண்டையோ வரைபடமோ கிடையாது. நோட்டுகள், புத்தகங்கள், பயிற்சி நூல்கள், பால்பாயிண்ட் பேனாக்கள் எதுவும் கிடையா. மாணவர்கள் விரும்பிப் படிக்கும் புத்தகங்கள் எதுவும் நூலகத்தில் இல்லை. அமெரிக்கப் பல்கலைக் கழகங்கள் டன் கணக்கில் அச்சிடப்பட்ட குப்பைகளை அனுப்பி வைத்திருந்ததை அடுக்கிப் போட்டிருந்தார்கள். ஒருவர் தூக்குவதற்குக்கூட சிரமப்பட வேண்டிய கனமான புத்தகங்கள். அமெரிக்காவில் வெள்ளையர்களால் நிராகரிக்கப்பட்ட நாவல்கள் இந்த நூலகத்துக்கு வந்து குவியும்.

தரிசு நிறத்தை போன்ற நிலத்தில் விளைந்துள்ள புல்லை ஒரு ஆடு மேய முயன்று கொண்டிருக்கிறது. பள்ளியின் தலைமை ஆசிரியர் பள்ளி நிதியைத் திருடியதால் இடைநீக்கம் செய்யப்பட்டிருக்கிறார். எப்படி இம்மாதிரி ஆட்கள் மற்றவர் கண்களிலிருந்து தாம் செய்யும் தவறுகள் தெரியாமல் போய்விடும் என்று நம்புகிறார்கள்?

என் நண்பனிடம் பணம் எப்போதும் இருப்பதில்லை. ஏனெனில், மாணவர்களும் ஆசிரியர்களும் அவனிடம் கடன் வாங்கி விட்டுத் திரும்பத் தரமாட்டார்கள். மாணவர்கள் ஆறிலிருந்து இருபத்தியாறு வயதுவரை நிரம்பியவர்கள். சிறு வயதில் பள்ளிக்கூடத்துக்குச் செல்ல முடியாமல் போனவர்கள், இப்போது பள்ளியில் வந்து சேர்ந்திருக்கிறார்கள். சில மாணவர்கள் - அது வெய்யிலோ மழையோ - நதிகளைக் கடந்து தினமும் பள்ளிக்கு வருகிறார்கள். அவர்களால் வீட்டுப் பாடங்களைச் சரியாக செய்ய முடிவதில்லை. ஏனென்றால், அவர்கள் வசிக்கும் கிராமங்களில் மின்சார வசதி கிடையாது. எரியும் விறகுக் கட்டையின் வெளிச்சத்தில் படிப்பது என்பது இயலாத காரியம். மாணவிகள் காலையிலும் மாலையிலும் வீட்டுக்குத் தண்ணீர் பிடித்துக் கொண்டு வர வேண்டும். சமையலுக்கு உதவ வேண்டும்.

நான் என் நண்பனுடன் அவனது அறையில் உட்கார்ந்து கொண்டிருக்கும் போது மனிதர்கள் வருகிறார்கள். பெரும்பாலானவர்கள் படிக்கப் புத்தகங்கள் தருமாறு கெஞ்சுகிறார்கள். என்னிடம் ஒருவன், "நீங்கள் லண்டனுக்குத் திரும்பிச் சென்ற பின் புத்தகங்கள் அனுப்புங்கள்" என்கிறான். "எங்களுக்குப் படிக்கக் கற்றுத் தந்தார்கள். ஆனால், படிக்கப் புத்தகங்கள் இல்லை. "

நான் பார்த்த ஒவ்வொருவரும் புத்தகத்தை வேண்டுபவர்களாக இருந்தார்கள்.

நான் அங்கு சில நாட்கள் இருந்தேன். எப்போதும் வீசும் தூசிக் காற்று, உடைந்திருந்த தண்ணீர்க்



குழாய்கள், நீர் பிடித்துக்கொண்டு வர தொலை தூரம் நடந்து செல்லும் பெண்கள். லண்டனிலிருந்து வந்த இன்னொரு லட்சியவாதி ஆசிரியருக்குப் பள்ளி நிலைமைகளைப் பார்த்ததும் ஜுரம் வந்துவிட்டது.

கடைசி நாளன்று ஆடு வெட்டினார்கள். அதைச் சிறு துண்டுகளாக்கி ஒரு பெரிய பானையில் வைத்து சமைத்தார்கள். ஆட்டு இறைச்சியும் கஞ்சியும் பரிமாறப்படும் ஆண்டு இறுதி நாள் விருந்து அது. நான் அவர்கள் சமைத்துக் கொண்டிருக்கும் போது காரில் ஏறிக் கிளம்பினேன். துண்டிக்கப்பட்ட மரக் கட்டைகளையும் தீயில் எரிந்து சாம்பலாகி நின்ற மிச்சங்களையும் கடந்தபடி சென்றேன்.

இந்தப் பள்ளியின் பெரும்பாலான மனவர்களுக்குப் பரிசு எதுவும் கிடைப்பதில்லை என்றே நான் நம்புகிறேன்.

மறுநாள் காலையில் நான் வட லண்டனில் இருந்த ஒரு பள்ளியில் உரையாற்ற வேண்டியிருந்தது. இந்தப் பள்ளியின் பெயர் அனைவரும் அறிந்த ஒன்று. மிக நல்ல பள்ளி. அந்தப் பள்ளி உறுதியான கட்டிடங்களைப் பெற்றிருந்தது. மிகப் பெரிய நூலகமும்கூட.

ஒவ்வொரு வாரமும் ஒரு பிரபலம் அந்தப் பள்ளிக்கு வந்து உரையாற்றுவார். புகழ் பெற்ற மனிதர்கள் அந்தப் பள்ளிக்கு வந்து உரையாற்றுவது எப்போதும் நடக்கும் விஷயம். அப்போது மாணவ மாணவிகளின் பெற்றோர், உறவினர் என்று பலரும் வருவர்.

நான் இந்தப் பள்ளியில் பேசும் போது புழுதி படர்ந்த வடமேற்கு ஜிம்பாப்வே பள்ளியின் நினைவு என் மனதெங்கும் நிறைந்திருந்தது. அந்த ஆங்கிலேயக் குழந்தைகளிடம் ஜிம்பாப்வே பள்ளியைப் பற்றிக் கூறினேன். படிக்க வசதியில்லாத வகுப்பறைகள், புத்தகங்களோ, உலக உருண்டையோ, வரைபடங்களோ இல்லாத பள்ளிகள். புத்தகங்களற்ற நூலகங்கள் பற்றிக் கூறினேன். அந்தப் பள்ளிகளின் மாணவர்கள் அவர்களது ஆசிரியர்களிடம் படிக்கப் புத்தகங்கள் தாருங்கள் என்று கெஞ்சுவதைப் பற்றிக் கூறினேன். ஆனால், இந்த ஆங்கிலேய மாணவர்கள் நான் சொல்வதைப் புரிந்துகொண்ட மாதிரி தோன்றவில்லை. அவர்களின் முகங்கள் சலனமற்றுப் பொம்மைகளைப் போல இருந்தன. நான் சொன்னவற்றில் சித்திரத்தை அவர்கள் உள்வாங்கிக் கொள்ளவில்லை என்பதை அவர்களின் முகங்கள் காட்டின.

புழுதிப் புயல் படிந்திருக்கும் பள்ளி, குடிக்க நீரில்லாத வறட்சி, புத்தகங்களுக்கு இறைஞ்சும் மாணவர்கள் - இத்தகைய வறுமையை இந்தச் சிறப்புரிமை பெற்ற குழந்தைகளால் கற்பனை கூடச் செய்ய முடியாது.

நான் பேசி முடித்தேன். அவர்கள் மரியாதை நிமித்தம் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் சிலர் நிச்சயமாகப் பரிசுகளைப் பெறுவார்கள்.

என் பேச்சு முடிந்தது. நான் அங்கு இருந்த அந்தப் பள்ளி ஆசிரியர்களிடம் அங்கு நூலகம் உள்ளதா? மாணவர்கள் அதை உபயோகிக்கிறீர்களா என்று கேட்டேன். பல்கலைக் கழகங்களில் நான் வழக்கமாகப் பெறும் பதிலே இங்கும் தரப்பட்டது: "பெரும்பாலான மாணவர்கள் இந்த நூலகத்தை உபயோகிப்பதில்லை. சிலரே உபயோகித்தால்கூட அது பெரிய விஷயம்தான்."

ஆம். நமக்குத் தெரிந்ததுதான். நம் எல்லோருக்கும்.

நாம் பிளவுண்ட ஒரு கலாச்சாரத்தில் இருக்கிறோம். நாம் நிச்சயமானவை என்று நம்புபவை மீதும் கேள்விகள் எழுப்பப்பட்டு விட்டன. இளைஞர்களும் யுவதிகளும் இவ்வளவு வருஷக் கல்விக்குப் பின்னரும் உலகைப் பற்றிய தெளிவான பார்வையும் ஞானமும் இல்லாதவர்களாக இருக்கிறார்கள். குறிப்பிட்ட விஷயங்களை மட்டும் தெரிந்து கொண்டவர்களாக இருக்கிறார்கள். உதாரணமாகக், கணினி பற்றி.

கணினியைக் கண்டுபிடித்தது ஒரு மகத்தான செயல். கணினி, தொலைக்காட்சி, இணையதளம் இவை எல்லாமே மகத்தான புரட்சியின் அடையாளம்! ஆனால், மனித குலம் எதிர்கொண்ட முதலான புரட்சி அல்ல இது. இதற்கு முன்பு ஏற்பட்ட அச்சுக் கலைப் புரட்சி புழக்கத்துக்கு வர பல பத்தாண்டுகள் அல்ல, அதைவிட அதிகமான காலம் தேவைப்பட்டது. எவ்வித முன் ஆராய்வும் கொள்ளாமல் அதை நாம் ஏற்றுக்கொண்டோம். அச்சுக் கலைப் புரட்சி மனிதனின் அறிவையும் செயல் திறனையும் அதிக உயரத்திற்குக் கொண்டு சென்றது. ஆனால், இப்போது கணினியின் கண்டுபிடிப்புக்குப் பிறகு அச்சுக்கலைக்கு என்ன நேர்ந்தது?

நாம் ஒரு கேள்வியும் கேட்காமல் கணினியின் பிறப்பை ஏற்றுக்கொண்டு சிலாகித்தோம். நமது வாழ்க்கை, சிந்தனைத் திறன் ஆகியவை இணையதளக் கண்டுபிடிப்பால் எவ்விதம் மாறியுள்ளன? ஒரு குறிக்கோளற்ற வெறுமையான அதன் இயல்புகளை நம் மீது சுமத்தி மயக்கிவிட்டது. சிறந்த அறிவாளிகளும்கூட அதன் பிடியில் சிக்கி அதனுடன் இழைந்துகிடக்கிறார்கள்! அதன் பிடியிலிருந்து வெளியே வரத் தெரியாமல் அல்லது வெளியே வர விரும்பாமல் கட்டுண்டு கிடக்கிறார்கள்.

ஒரு சாதாரண படிப்பறிவு கொண்டவன், கல்வி மீதும் இலக்கிய புதையல்கள் மீதும் மிகுந்த மதிப்பு கொண்டவனாகி விடுகிறான். அவனைப் பார்த்து மற்றவர்களும் படிப்பு மீது தங்களுக்குப் பிடிப்பும் மரியாதையும் இருப்பதாகக் கூறுகிறார்கள். வேலை பார்க்கிற ஆண்களும் பெண்களும் புத்தகத்திற்காக ஏங்கினர். பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் நிறுவப்பட்டு இயங்கிய தொழிலாளர்களுக்கான நூலகங்கள் இதற்குச் சாட்சி.

புத்தகங்களை படிப்பது, கல்வி கற்பதன் ஒரு பகுதியாக இருந்தது. வயதானவர்கள் இளைஞர்களிடம் புத்தகம் படிப்பதன் அவசியத்தை வலியுறுத்த வேண்டும். ஏனெனில், இன்றைய இளைஞர்களுக்கு அதைப் பற்றிய பிரக்ஞை இல்லை. குழந்தைகளால் படிக்க முடியவில்லை என்றால் அவர்கள் படித்துப் பழகவில்லை.

இது ஒரு துக்கத்துக்குரிய விஷயம் என்று நம் எல்லோருக்கும் தெரியும்.

"படிப்பு ஒரு மனிதனை முழுமைப்படுத்துகிறது" என்பது ஆன்றோர் வாக்கு. ஓர் ஆணிடத்திலும் ஒரு பெண்ணிடத்திலும் வரலாறு பற்றி, வாழ்க்கை பற்றி, மனிதர்களைப் பற்றிய படிப்பு தகவல் திரட்டுகளைத் தருகின்றது. அறிவின் சாரம் எழுவது அங்குதான்.

மேற்கில் வசிக்கும் நாம் மட்டும்தான் என்றில்லை. ஜிம்பாப்வேயில் வசிக்கும் ஒரு நண்பன் சொன்னான்: "அங்குள்ள ஒரு கிராமத்தில் மூன்று நாட்களாக ஜனங்கள் பட்டினியில் வாடினார்கள். ஆனால், அப்போதும் அவர்கள் புத்தகங்கள் படிப்பது பற்றி, அவற்றைப் பெறுவது பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்" என்று.

கிராமங்களுக்குப் புத்தகங்களைக் கொண்டு சேர்க்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் ஒரு நிறுவனத்தைச்

சேர்ந்தவள் நான். அந்த நிறுவனத்தில் சிலர் வேறொரு வேலைத் திட்டத்தின் கீழ் ஜிம்பாப்வேயின் அடித்தள மக்களைத் தொடர்புகொள்ள கிராமங்களுக்குச் சென்றனர். அவர்கள் சந்தித்த மக்கள், பொதுவாகக் கிராம மக்களின் மீது இருக்கும் கருத்துக்கு எதிராக புத்திசாலிகளாக விளங்கினார்கள். அவர்களில் பலர் ஒய்வு பெற்ற ஆசிரியர்கள். இன்னும் சிலர் விடுமுறையில் வந்திருந்த ஆசிரியர்கள், வயதானவர்கள். நானும் ஒரு சிறிய கணிப்பைக் கிராமப்புறத்தில் செய்தேன். கிராம மக்கள் எதைப் படிக்க விரும்புகிறார்கள் என்றறிய. முன்பு ஒரு முறை சுவீடன் நாட்டைச் சேர்ந்த ஒரு குழு கண்ட முடிவுகளுடன் என்னுடையதும் ஒத்துப் போயிருந்தது.

நாம் ஐரோப்பாவில் படிக்க விரும்புவதையே இந்தக் கிராம மக்களும் படிக்க விரும்புகிறார்கள். எல்லா விதமான புத்தகங்களையும், விஞ்ஞானக் கதைகள், துப்பறியும் கதைகள், கவிதைகள், நாடகங்கள், தொழில் கற்றுக்கொள்வது எப்படி? கட்டுரைகள் அடங்கிய புத்தகங்கள் என்று எதையும் தவிர்க்க அவர்கள் முயலவில்லை. 'ஷேக்ஸ்பியர் எழுத்துக்கள் வேண்டும்' என்று கேட்டார்கள். அவர்கள் கிடைத்ததைப் படித்து விடுகிறார்கள். அதனால்தான் 'கேஸ்டர்பிரிட்ஜ் மேயர்', 'அனிமல் ஃபார்ம்' ஆகியவை இந்தக் கிராமங்களில் பிரபலமாகியிருந்தன.

எங்கள் நிறுவனத்துக்கு ஆரம்பம் முதல் நார்வே யிலிருந்து உதவி கிடைத்தது. பிறகு சுவீடன். இம்மாதிரி உதவிகள் கிட்டியிரா விட்டால் எங்களால் அதிகப் புத்தகங்கள் அனுப்பியிருக்க முடியாது. எங்கிருந்தெல்லாம் புத்தகங்கள் கிடைத்தனவோ அவற்றை நாங்கள் உபயோகப் படுத்திக்கொண்டோம். ஒன்றை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். இங்கிலாந்தில் சாதாரண பைண்டு புத்தகத்தின் விலை ஜிம்பாப்வேயில் ஒருவரின் மாதச் சம்பளத்துக்கு இணையானது. இதுகூட முகாபேயின் பயங்கரவாத ஆட்சிக்கு முன்பு. இப்போது பணவீக்கம் அதிகரித்துள்ள நிலையில் இதுவே பல வருஷத்துக்கான சம்பளமாக ஆகிவிட்டது. ஒரு புத்தகப் பெட்டியைக் கிராமத்துக்கு வண்டியை வைத்து எடுத்துச் செல்லுகையில் - இப்போது பெட்ரோலும் தங்கத்துடன் போட்டி போடுகிறது - உங்களை வரவேற்பது மகிழ்ச்சிக் கண்ணீருடன் அக்கிராமத்தின் மக்கள்.

ஒரு மரத்தின் கீழ் கட்டையைப் போட்டு நூலகம் அமைந்திருக்கும். புத்தகங்கள் வந்த ஒரு வாரத்துக்குள் வகுப்புகள் ஆரம்பித்து விடும். படிக்கத் தெரிந்தவர்கள் படிக்கத் தெரியாதவர்களுக்கு கற்பிப்பார்கள். எங்கோ ஒரு மூலையில் இருந்த ஒரு கிராமத்தில் - அங்கு வழக்கில் இருக்கும் மொழி டோங்கோ - அங்கிருந்த படித்த நாலைந்து பேர் அவர்களது டோங்கோ மொழியில் நாவலை மொழிபெயர்த்துக் கொடுத்தார்கள். ஜிம்பாப்வேயில் ஆறு, ஏழு மொழிகள் புழக்கத்தில் உள்ளன. எல்லா நாவல்களும் -கொலை, குற்றம், பயங்கரம், காதல், பாலியல் நாவல்கள் - எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு இருந்தன.

மக்கள் அவர்களின் தகுதிக்கு ஏற்ப அரசைப் பெறுகிறார்கள் என்பது ஜிம்பாப்வேக்குப் பொருந்தி வராது. அவர்களின் புத்தக தாகமும் புத்தகங்கள் மீது கொண்ட மரியாதையும் முகாபேயின் ஆட்சிக்கு முன்பிருந்தவர்களிடமிருந்து வந்தது. அதாவது வெள்ளையர்களின் ஆட்சிக் காலத்திலிருந்து. கென்யா முதல் கேப் ஆ ஃப் ஹோப் வரை இந்தக் காதலும் மரியாதையும் மக்களிடம் தென்படுவது ஆச்சரியமான ஒன்று.

நான் ஓலைக் கூரை வேய்ந்த குடிசையில் வளர்க்கப்பட்டவள். நாணல் புதர், வைக்கோல், ஓலை, மண்சுவர் இவற்றால் கட்டப்பட்டது எங்கள் இருப்பிடம். இங்கிலாந்தில் தாழ்த்தப்பட்ட சாக்சன் குடியிருப்பினரின் இடங்களில் உள்ளது போல. எங்கள் வீட்டில் அடுத்தடுத்துக் கட்டப்பட்ட நான்கு அறைகள். அவற்றையும் என் பெற்றோர் இங்கிலாந்திலிருந்து கொண்டு வந்திருந்த புத்தகங்கள் நிறைத்திருந்தன. இவற்றைத் தவிர அவ்வப்போது என் தாய் தபால் மூலம் எங்களுக்காகத் தருவித்த புத்தகங்கள் தபால் மூலம் வந்தன.

பெரிய பார்சலில் வரும் புத்தகங்களைப் பார்த்து குழந்தைகளான நாங்கள் குதூகலிப்போம். ஒரு மண்குடிசை வீடு. ஆனால், எங்கும் புத்தகங்கள். இன்றும்கூட எங்கள் மண் குடிசையைப் போலவும், மின்சாரம் தண்ணீர் ஆகியவை கிடைக்காமலும் உள்ள கிராமத்து வீடுகளில் வசிப்பவர்கள், "நான் ஒரு எழுத்தாளன் ஆக வேண்டும்" என்று எழுதுகிறார்கள். "ஏனென்றால் நானும் நீ வசித்த குடிசை வீடு போல ஒன்றில்தான் வசித்து வருகிறேன்!"

ஆனால், இங்குதான் சற்று சிரமம் இருக்கிறது.

எழுத்தாளனோ, எழுத்தோ புத்தகங்களற்ற வீடுகளிலிருந்து வருவதில்லை.

இங்கு ஒரு இடைவெளி இருக்கிறது. அதுதான் சிரமம்.

ஏற்கனவே இந்தப் பரிசைப் பெற்ற சிலரின் பேச்சுகளைக் கேட்டிருக்கிறேன். உதாரணமாக மகத்தான எழுத்தாளரான பாமுக். அவர் தனது தந்தை ஐநூறு புத்தகங்கள் வைத்திருந்ததாகச் சொல்லி யிருக்கிறார். அவரது திறமை வெற்று வெளியிலிருந்து வந்து குதித்து விடவில்லை. அவர் ஒரு நீண்ட மரபின் தொடர்ச்சி.

வி.எஸ். நைபாலை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் சொல்கிறார்: இந்திய வேதாந்தம் அவரது குடும்ப வேரில் இறுகப் பின்னிப் பிணைந்திருந்தது என்று. அவரை எழுதும்படி அவரது தந்தை உற்சாகப்படுத்தினார். நைபால் ஒரு நீண்ட மரபுடன் இணைந்திருந்தார்.

நாம் ஜான் கோட்சீயை எடுத்துக்கொள்வோம். அவர் ஒரு நீண்ட மரபைச் சார்ந்தவர் மட்டுமல்ல. அவரே ஒரு மரபுதான். கேப்டவுனில் அவர் இலக்கியம் கற்பித்தார். அவருடைய வகுப்புகளில் ஒன்றில்கூட நான் கலந்துகொள்ளாமல் விட்டதற்கு எவ்வளவு வருந்தியிருக்கிறேன் தெரியுமா? அசாத்தியமான திறமையும் தைரியமான சிந்தனையும் கொண்டவர் அவர்.

எழுதவும் இலக்கியம் படைக்கவும் ஒருவருக்கு நூலகங்களுடனும் புத்தகங்களுடனும் மரபுடனும்

மிகுந்த பரிச்சயம் இருக்க வேண்டும்.

என்னுடைய நண்பர் ஒருவர் ஜிம்பாப்வேயைச் சேர்ந்த கறுப்பின எழுத்தாளர். அவர் ஜாம் ஜாடிகளில், பழங்கள் அடைக்கப்பட்ட டின்களில் ஒட்டியிருக்கும் லேபிள்களை எழுத்துக் கூட்டிப் படித்துத் தானே கற்றுக்கொண்டவர். அவரது குடும்பம் கிராமத்தில் கறுப்பின மக்கள் வசிக்கும் பகுதியில் இருந்தது. சரளை மண் பூமி, உயரத்தில் எழும்பாத செடிகளால் ஆன புதர்கள். ஆகவே, அவரது மண் குடிசை வீடு மிக மோசமாயிருந்தது. நான் முன்பு சொன்ன மோசமான பள்ளியொன்றில் படித்தார். குப்பை மேட்டில் ஒரு 'குழந்தைக் கலைக் களஞ்சியம்' புத்தகம் கிழிந்து கிடந்தது. அதை எடுத்துப் படித்துத் தன் கல்வியை வலுப்படுத்திக் கொண்டார்.

1980இல் சுதந்தரம் அடைந்தபோது கூட்டில் இருந்து வளர்ந்து இனிமையாகப் பாடும் பறவைகள் போல சில நல்ல எழுத்தாளர்களின் குழு ஒன்று ஏற்பட்டது. இவர்கள் வெள்ளையர் ஆண்ட பழைய ரொடீசியாவில் வளர்ந்தவர்கள். சிறந்த கல்வி தரும் மிஷன் பள்ளிகளில் படித்தார்கள். சர்வாதிகாரி முகாபேயின் ஆட்சியில் எழுத்தாளர்கள் உருவாக்கப்படவில்லை.

எழுத்தாளராக இலக்கியப் பயிற்சி பெற்று ஆவதற்கு எல்லோரும் கஷ்டமான பாதையில்தான் நடக்க வேண்டியிருந்தது. அச்சிடப்பட்ட லேபிள்களையும் கிழிந்த கலைக் களஞ்சியத்தையும் படித்துத் தானாகவே அறிவு பெற முனைந்தது ஒவ்வொருவரும் செய்யும் செயலாக இருந்தது. தமக்கு எட்டாத கல்வியை அடைய முயலும் இக் குடிசைவாசிகளை அவர்களின் இருப்பிடங்களை, குழந்தைகள், வேலை செய்து களைப்படைந்த தாய்மார், உணவுக்கும் உடைக்கும் போராடும் நிலைமை எல்லாம் சூழ்ந்திருக்கின்றன.

இவ்வளவு மோசமான நிலையிலும் எழுத்தாளர்கள் அங்கே உருவாகி வருகிறார்கள். இன்றைய ஜிம்பாப்வே என்பது நூறு வருஷங்களுக்குள் உருவாக்கப்பட்ட நாடு. இம்மனிதர்களின் மூதாதையர்கள் வாய் மூலமாகக் கதை மரபை வளர்த்தார்கள். ஓரிரு தலைமுறைகளில் இவ்வாய்மொழிக் கதைகள் அச்சு ரூபத்தைப் பெற்றுவிட்டன. என்ன ஒரு சாதனை! வெள்ளைக்காரர்களின் குப்பைகளும் சிதைவுக் கூளங்களுமாக இருந்த சூழலை ஒழித்துப் புத்தகங்கள் உருவாகியிருக்கின்றன. வெறும் தாள், புத்தகமாக மாறும் அற்புதம்!

எனக்கு ஆப்பிரிக்கப் புத்தக வெளியீட்டு விவரங்கள் அனுப்பப்படுகின்றன. சற்றே மேம்பட்ட வாழ்க்கை முறை நிலவும் வட ஆப்பிரிக்காவில் - இங்கு வசதியானவர்கள் எண்ணிக்கை அதிகம் - புத்தக வெளியீடு பற்றிப் பேசுவதே 'கனவு கண்டது நடந்து விடும்' என்ற வசீகரத்தை எழுப்புகிறது.

நான் இங்கு பேசுவது எல்லாம் எழுதப்படாத புத்தகங்கள் பற்றி. இக்குரல்கள் இன்றும் கேட்கப்படாதவை. பதிப்பாளர்கள் இல்லாததால் எழுத்தாளர்கள் எழுந்து நிற்க முடியாத நிலை. ஆழ்ந்த திறமையைக் கொண்டவர்களின் குரல்களை வெளிக் கொணராமல் போவது அளவிடமுடியாத பெரிய சேதாரம். ஒரு புத்தகம் வெளிவர, பதிப்பாளர், எழுத்தாளருக்கான முன்பணம், உற்சாகமூட்டுவது இவை தேவை. ஆனால், இவை எதுவும் கிடைக்காத சூழ்நிலை.

எழுத்தாளர்கள் அடிக்கடி கேட்கும் கேள்வி நீங்கள் எப்படி எழுதுகிறீர்கள்? கணினி மூலமா? மின்தட்டுச்சுப் பொறி மூலமா? அல்லது இறகை வைத்தா!? கையால் எழுதியா? ஆனால், உண்மையில் கேட்க வேண்டிய கேள்வி என்னவோ, "நீங்கள் சுதந்தரமாக எழுதுவதற்கான உங்கள் பிரத்தியேக இடத்தை, வெளியைக் கண்டுவிட்டீர்களா?" என்பதுதான். அந்த இடத்தில், வெளியில் உங்கள் செவிகள் கூர்மை கொள்ளும். உங்கள் கவனம் சிதறாது வார்த்தைகளில் மூழ்கியிருக்கும். உங்களின் பாத்திரங்கள், பேசும் வார்த்தைகள், கருப்பொருள், உத்வேகம் எல்லாம்!

ஒரு எழுத்தாளனுக்கு அவனது வெளி கிட்டாத வரை அவனது கவிதைகளும் கதைகளும் இன்னும் எழுதப்படாதவைதான். ஆனால், இதற்கு முற்றிலும் மாறான சூழ்நிலை ஒன்று இருக்கிறது. பெருநகரங்களில் ஒன்றான லண்டனில் எதிர்ப்படும் புதிய எழுத்தாளரைப் பற்றி வழக்கமாகக் கேட்கப்படுவது: அவள் அழகாய் இருக்கிறாளா? ஆண் என்றால், கவர்ந்திழுக்கும் அழகானா? வசப்படுத்த முடிந்தவனா? கேட்டு விட்டு இதை ஜோக் என்கிறார்கள். ஆனால், இது ஜோக் அல்ல.

இந்தப் புதிய எழுத்தாளர்கள் விரைவில் புகழ் அடைகிறார்கள். பணம் கிடைக்கிறது. அவர்களின் புகைப்படங்கள் உலகின் கவனத்தைக் கவ்வுகின்றன. அள்ளி வீசப்படும் புகழ்ச்சி மழையில் நனைகிறார்கள். ஆனால், நம்மைப் போன்ற மூத்த எழுத்தாளர்கள் இந்தப் புதியவர்களைப் பார்த்துப் பரிதாபம் கொள்ளுகிறோம். இவர்களுக்கு நாளை என்ன காத்துக் கொண்டிருக்கிறது என்பது தெரியாது.

பிரபலம் அடைந்த இவர்களில் பலர் மறுபடியும் எழுதியதில்லை. அல்லது அவர்கள் விரும்புவதை எழுத முடிந்ததில்லை. அப்போது அவனோ, அவளோ சொல்லுவது என்ன? நான் கேட்டிருக்கிறேன்: "இவ்வளவு துரதிர்ஷ்டமான நிலை என் வாழ்வில் நிகழ்ந்துவிட்டது."

நாமோ மூத்த எழுத்தாளர்களாக அவர்கள் காதில் முணுமுணுக்க விரும்புகிறோம். 'உனக்கான வெளி கிடைத்ததா? உனது ஆன்மாவின் உள்ளிருந்து கேட்கும் குரல் உனக்கு மட்டுமே கேட்கும். நீ கனவு காணும் இடம் கிடைக்கும் போது அதை விட்டுவிடாதே.'

என் மனம் முழுதும் ஆப்பிரிக்க நினைவுகள் படர்ந்து கிடக்கின்றன. வேண்டும் போது அவற்றை எடுத்துக் கொஞ்சுகிறேன். மாலையில் கதிரவன் கீழே விழும் தருணங்கள் - மஞ்சளும் ஆரஞ்சும் ஊதாவுமாய் மின்னியபடி வானவெளியெங்கும் பரவிக் கிடக்கும் காட்சி! கலஹாரியில் புதர்களினூடே சுழன்று சுழன்று ஆடும் வண்ணத்துப் பூச்சிகள், வண்டுகள்! அல்லது சம்பேசி நதிக்கரையில் உட்கார்ந்து ஆப்பிரிக்கப் பறவைகளின் இன்னொலிகளைக் கேட்டும், நீரில் படியும் கறுப்பும் நீலமுமான அலைகளின் அசைவைப் பார்த்தும் செலவழிக்க விரும்பும் மாலைப் பொழுதுகள்!



யானைகள், ஒட்டகச் சிவிங்கிகள், சிங்கங்கள் மற்றும் பல விலங்கினங்கள் சுற்றும் காடுகள்! இரவு வானில் ஓய்வற்று மின்னும் நட்சத்திரங்கள்!

வேறு பல நினைவுகளும் உள்ளன. சுமார் பதினெட்டு வயதிருக்கும். அவன் நூலகம் என்று கருதி வந்து நின்ற இடத்தில் கண்களில் நீருடன் அந்த இளைஞன் நின்றான். அப்போது அங்கு வந்திருந்த ஓர் அமெரிக்கப் பயணி புத்தகம் எதுவுமில்லாத அந்த நூலகத்தைப் பார்த்து விட்டு ஒரு கூடை நிறைய புத்தகங்களை அமெரிக்காவிலிருந்து அனுப்பினார். அந்த இளைஞன் அவற்றை ஆவலுடன் முகர்ந்து முகர்ந்து பார்த்து விட்டு மூடி வைத்தான். "படிப்பதற்காக அல்லவா இவை அனுப்பப்பட்டன?" என்ற கேள்விக்கு அவன் "ஐயோ, அவை அழுக்காகி விட்டால் மறுபடியும் எங்கிருந்து அவற்றை நான் பெறுவது?" என்றான்.

இந்த இளைஞன் எங்களிடம் வந்து இங்கிலாந்திலிருந்து புத்தகங்களை அனுப்பி வைக்குமாறு கேட்டான். மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டுமாம். "நான் நான்கு வருஷங்கள் சீனியர் பள்ளியில் படித்தேன். ஆனால், எப்படிக் கற்றுக் கொடுப்பது என்று எனக்குச் சொல்லித் தரப்படவில்லை."

நான் இன்னொரு பள்ளியில் பார்த்த ஆசிரியரிடம் புத்தகமோ, கரும் பலகையோ, சாக்பீஸோ இல்லை. அவர் கூழாங் கற்களை வைத்து, "இரண்டும் இரண்டும் நான்கு" என்று சொல்லித் தருகிறார். நான் பார்த்த இருபது வயதுகூட நிரம்பாத இளம்பெண் பாடப் புத்தகமோ எழுதுகோலோ நோட்டுகளோ எதுவுமின்றி பாடம் நடத்துகிறாள். அவள் கையில் ஒரு குச்சி இருக்கிறது. மண்ணில் அதை வைத்துக் கீறி ஏ,

பி, சி, டி என்று எழுதிக் காண்பிக்கிறாள். மேலே இருந்து பொசுக்கும் சூரியனும் கீழே புரளும் புழுதியும் சாட்சிகளாக நின்று பார்க்கின்றன.

கல்விப் பசி கொண்டு திரியும் ஒரு பெரும் கூட்டத்தை நான் இங்கே ஆப்பிரிக்காவில் பார்க்கிறேன். பிள்ளைகள் படித்து முன்னேற வேண்டும் என்று தவம் கிடக்கும் பெற்றோர்கள்.

தென்னாப்பிரிக்காவில் நீங்கள் ஒரு இந்தியக் கடைக்கு முன்பு நிற்பதாகக் கற்பனை செய்துகொள்ளுங்கள். அந்த இடத்தில் ஏழ்மையும் வறட்சியும் படர்ந்து கிடக்கின்றன. பெரும்பாலும் பெண்கள், வரிசையில் நின்று கொண்டு தண்ணீர்ப் பானையுடன் காத்திருக்கிறார்கள். அந்தக் கடைக்கு ஒவ்வொரு நாளும் தண்ணீர் லாரி வரும்.

கடைக்கார இந்தியன் கவுன்டரில் கை ஊன்றியபடி கூட்டத்தைப் பார்க்கிறான். அவன் பார்வை அங்கு நிற்கும் கறுப்பினப் பெண் ஒருத்தியின் மேல் விழுகிறது. அவள் ஒரு புத்தகத்திலிருந்து கிழிக்கப்பட்ட தாள் ஒன்றைக் குனிந்து பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவள் படிப்பது அன்னா கரினீனா.

அவள் மெதுவாக வார்த்தைகளை உச்சரித்தபடி படிக்கிறாள். அது ஒரு கஷ்டமான பக்கமாகத் தோன்றுகிறது. அவள் காலைப் பிடித்துக்கொண்டு அவளது இரு குழந்தைகள் நிற்கின்றன. கடைக்கார இளைஞன் உறுத்தப்பட்டவனாக அவள் தலை யிலிருக்கும் ஸ்கார்ஃபைப் பார்க்கிறான். அந்த வெள்ளைத் துணி, தூசி பரவிப் பரவி மஞ்சள் நிறத்தில் இருக்கிறது. அவள் மார்பிலும் கைகளிலும் தூசி படர்ந்து கிடக்கிறது. தாகத்துடன் வரிசையில் நிற்பவர்களைப் பார்த்து இளைஞன் சங்கடப்படுகிறான். அவர்கள் அனைவருக்கும் போதுமான நீர் கிடைக்காது. தூசி தும்புகளுக்கு அப்பால் இறக்கும் மனிதர்களின் நிலையை நினைத்து அவனுக்குக் கோபம் வருகிறது. அவனுடைய மூத்த சகோதரன்தான் கடையைப் பார்த்து கொள்வது. இன்று அவனுக்கு சோர்வாய் இருந்ததால் ஓய்வு தேவை என்று கடையை இவனிடம் கொடுத்து விட்டு நகருக்குச் சென்றிருக்கிறான்.

இளைஞன் ஆச்சரியத்துடன் அந்தப் பெண்ணிடம் "நீ என்ன படிக்கிறாய்?" என்று கேட்கிறான்.

"ரஷ்யாவைப் பற்றியது" என்கிறாள் அவள்.

"உனக்கு ரஷ்யா எங்கே இருக்கிறது என்று தெரியுமா?" என்று கேட்கிறான். அவனுக்கே தெரியுமா என்பது சந்தேகம்தான்.

அவள், அவன் கண்களை நேரே பார்த்துப் பெருமையுடன், "என் வகுப்பில் நான்தான் சிறந்த மாணவி என்று என் டீச்சர் சொல்லியிருக்கிறாள்" என்கிறாள்.

அந்தப் பெண் படிப்பதை மீண்டும் தொடர்கிறாள். அந்தப் பாராவை முடித்தாக வேண்டும்.

இளைஞன் இரு குழந்தைகளுக்கும் ஃபாண்டாவை எடுத்துத் தருகிறான். அவள் தடுத்து, "குளிர்பானம் தாகத்தை மேலும் ஏற்படுத்தும்" என்கிறாள்.

அவன் செய்யக் கூடாத காரியம் என்று தெரிந்தும் தனக்குப் பின்னால் இருந்த பிளாஸ்டிக் அண்டாவிலிருந்து நீரை எடுத்து இரு குவளைகளில் அந்தக் குழந்தைகளுக்குத் தருகிறான். அந்தக் குழந்தைகள் குடிக்கும் போது அந்தப் பெண்ணின் வாயும் கூடவே அசைவதை அந்த இளைஞன் பார்க்கிறான். அவளுக்கும் அவன் நீர் அருந்தத் தருகிறான். அவள் குடிக்கும் விதமும் வேகமும் அவனுக்குள் வருத்தத்தை எழுப்புகின்றன.

இப்போது அவள் தனது சொந்த நீர்க் குவளையை நீட்டுகிறாள். அவன் அதை நிரப்புகிறான், நீரை அவன் சிந்தி விடக் கூடாது என்ற கவலையுடன் அவளும் குழந்தைகளும் அவனைக் கவனிக்கின்றன.

அவள் மறுபடியும் குனிந்து அந்தப் பக்கத்தைப் பார்க்கிறாள். அந்தப் பாரா அவளை வசீகரிக்கிறது. வாய் விட்டுப் படிக்கிறாள்:

"வெள்ளைக் கைக்குட்டை சுற்றப்பட்டிருந்த கறுப்புத் தலைமயிருடன் இருந்த வரென்கா தன் குழந்தைகளைக் கனிவுடன் பார்த்தாள். அதே சமயம் அவள் மிகவும் விரும்பிய, திருமணம் செய்துகொள்ளத் துடித்த இளைஞனின் வரவுக்காக அவள் மனம் காத்திருந்தது. கோஸ்னிசெவ் அவள் அருகே நடந்தபடி அவள் அழகை ஆராதிக்கும் பார்வையை வீசியபடி நெருங்கினான். அவளைப் பார்க்கும் போது அவள் பேசிய இனிமையான பேச்சுக்களும் அவளைப் பற்றி அவன் அறிந்தனவும் அவன் நினைவுக்கு வந்தன. அவள் மீது அப்போது எழுந்த பரவசம் முன்பொரு காலத்தில் அவனது இளைமைப் பருவத்தில் அவனுக்கு ஏற்பட்ட அரிதான உணர்ச்சியை ஞாபகமூட்டிற்று. அவள் அருகாமை தந்த உணர்வு தாங்க முடியாத கிளர்ச்சியை ஏற்படுத்திற்று. அவள் வைத்திருந்த கூடையில் ஒரு பெரிய காளான் தண்டைத் தைரியமாகப் போட்டான். அவன் பிறகு அவள் விழிகளை உற்று நோக்கினான். ஒரே சமயத்தில் மகிழ்ச்சியையும் சற்றுப் பயத்தையும் அவள் முகம் பிரதிபலித்தது. அவனுக்குக் குழப்பம் ஏற்பட்டது. மௌனமாய், அர்த்தம் பொதிந்த ஒரு புன்னகையை வீசினான்."

அந்தப் பெண் வீட்டுக்குக் கிளம்பும் நேரம் நேரம் வந்து விட்டது. அவளது கிராமத்தை அடைய நான்கு மைல்கல் நடக்க வேண்டும். வெளியே நிற்கும் பெண்கள் இரைச்சலிட்டுக் கொண்டும் சண்டையிட்டுக் கொண்டும் நிற்கிறார்கள். கடைக்காரன் அவர்களைக் கவனித்தபடி நிற்கிறான். இரண்டு குழந்தைகளுடன் திரும்பத் தனது கிராமத்துக்குச் சென்று தன் துயர வாழ்க்கையில் மூழ்கப் போகும் அந்தப் பெண்ணைக் கடைக்காரன் நினைத்துப் பார்க்கிறான். அந்தக் கிழிந்த பக்கங்களை நீயே வைத்துக் கொள் என்று கூறி யிருக்கலாம் என்று நினைக்கிறான். ஆனால், அதை அவள் படித்துப் புரிந்துகொள்வாள் என்ற நம்பிக்கை அவனுக்கு இருக்கவில்லை.

அன்னா கரீனினாவின் கிழிந்த பக்கங்கள் எங்கோ ஒரு கோடியில் இருக்கும் இந்தக் கிராமத்தின் கடைக்கு எப்படி வந்து சேர்ந்தன? இம்மாதிரிதான்:

ஐக்கிய நாடுகள் சபையின் அலுவலகத்தில் வேலை பார்க்கும் உயர் அதிகாரி ஒருவர் கடல்களையும் சமுத்திரங்களையும் கடந்து பயணிக்க வேண்டியிருக்கும்



போது வழியில் படிக்க ஒரு புத்தகம் வாங்குகிறார். விமானத்தில் முதல் வகுப்பு இருக்கையில் அமர்ந்து அவர் கையில் இருக்கும் புத்தகத்தை மூன்று பாகங்களாகப் பிரித்துக் கிழிக்கிறார். அருகில் உள்ளவர்கள் அதிர்ச்சியோடும் ஆச்சரியத்தோடும் தன்னைக் கவனிப்பதைக் கவனித்தபடி. பிறகு சுற்றியுள்ளோருக்குக் கேட்கும் குரலில், "நீண்ட பயணம் செய்யும் போது இது என் வழக்கம். ஒரு கனத்த புத்தகத்தை எடுத்துக் கொண்டு யார் அலைவது?" ஒவ்வொரு பாகத்தையும் படித்து முடித்ததும், விமானத்தில் சாதாரண வகுப்பில் அமர்ந்திருக்கும் அவருடைய செகரட்டரிக்கு அனுப்பி விடுகிறார். ரஷ்யாவின் பிரசித்துப் பெற்ற நாவலின் கிழிக்கப்பட்ட பக்கங்கள் கடைசியாக விமானத்தின் பின்புறத்தை அடைகின்றன.

இதற்கிடையில் இந்தியக் கடையின் கவுன்ட்டர் அருகே ஒரு பெண் வந்து நிற்கிறாள். அவள் ஜீன்ஸ் அணிந்து அதற்கு மேல் கம்பளி மேலாடை அணிந்திருக்கிறாள். அந்த நவீன மங்கையின் அருகே அவளது இரு குழந்தைகள் அவள் உடையைப் பிடித்துக் கொண்டு நிற்கின்றன.

அவள் கடைக்காரரைப் பார்த்து நன்றியைத் தெரிவிக்கும் பார்வையை வீசுகிறாள். அவன் தன்னை விரும்புவதையும் தன் மீது பரிதாபம் கொண்டுள்ளதையும் அவள் அறிவாள். அவள் கடையை விட்டு வெளியேறுகிறாள்.

மலையெனக் குவிந்திருக்கும் புழுதியின் மேல் ஜாக்கிரதையாக அடி வைத்து இரு குழந்தைகளையும் பிடித்துக் கொண்டு நடந்தாள். இது கஷ்டம்தான். ஆனால், பழகி விட்டது. அவள் சிந்தனை அவள் படித்த கதையின் மேல் இருந்து கொண்டிருந்தது. அதைப் பற்றி யோசித்தாள். கதையில் வரும் பெண்ணும் தன்னைப் போலத்தான். வெள்ளை ஸ்கார்ஃபுடன் இரு குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு நடக்கும் அவள் தன்னைப் போலத்தான். தானே அவளாக இருக்கக் கூடும். அந்த ரஷ்யப் பெண்ணாக. அந்தக் கடைக்காரனும் அவளை விரும்புகிறான். அவளைத் திருமணம் செய்துகொள்ளக் கேட்கப் போகிறான். அவள் அந்தப் பாராவைத் தவிர மேலே படிக்க முடியாமல் போய்விட்டது. ஆம், ஒரு மனிதன் என்னைத் தேடி வருவான். இந்தக் கஷ்டங்களிலிருந்து என்னை விடுதலை செய்து என்னையும் என் குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு போவான். ஆம். அவன் என்னைக் காதலித்துக் காப்பாற்றுவான்.

அவள் மேலே நடக்கிறாள். தண்ணீர்ப் பானை அவள் தோள்களுக்கு வலியைத் தருகிறது. பாதி வழியில் பானையைக் கீழே இறக்கி விட்டு கையை உதறிக் கொள்கிறாள். பானைக்குள் இருக்கும் தண்ணீர் போடும் 'கலக்' 'புலக்' சத்தத்தைக் குழந்தைகள் கேட்கிறார்கள். அவர்கள் அந்தப் பானையைத் தொட்டுத் தொட்டு ஆட்டம் போடுகிறார்கள். "பொறு, பொறு" என்று குழந்தைகளிடம் சொல்லுகிறாள். பிறகு மறுபடியும்

பானையைத் தூக்கிக் கொண்டு மேலே நடக்கிறாள். பானையைத் திறந்தால் உள்ளே புழுதி போகும். வீட்டை அடையும் வரை அவளால் அந்தப் பானையைத் திறக்க முடியாது.

அவள் நினைக்கிறாள். 'என் டீச்சர் அங்கு ஒரு நூலகம் இருப்பதாகவும், அது சூப்பர் மார்க்கெட்டை விடப் பெரிது என்றும், அதன் உள்ளே புத்தகங்கள் நிரம்பிக் கிடப்பதாகவும் சொன்னாள்.' அந்த இளம்பெண் தனக்குத் தானே புன்னகை செய்தபடி மேலே நடக்கிறாள். புழுதிக் காற்று அவள் மேலே வீசுகிறது. 'நான் புத்திசாலிதான்!' என்று அவள் நினைத்துக்கொள்கிறாள். டீச்சரும் பள்ளியிலேயே நான்தான் சிறந்த புத்திசாலி என்று சொன்னாள். 'என் குழந்தைகள் புத்திசாலிகளாக இருப்பார்கள். என்னைப் போலவே! நான் அவர்களைப் புத்தகங்கள் நிரம்பிய நூலகத்துக்கு அழைத்துச் செல்வேன். அவர்கள் நல்ல பள்ளிக்குச் செல்வார்கள். அவர்கள் ஆசிரியர்களாக ஆவார்கள். என் டீச்சர் நீயும் டீச்சராகலாம் என்று என்னிடம் சொன்னாள். என் குழந்தைகள் தொலை தூரம் சென்று நல்ல வேலை பார்ப்பார்கள். நிறையப் பணம் சம்பாதிப்பார்கள். அவர்கள் ஒரு பெரிய நூலகத்தின் அருகே வசிப்பார்கள். நல்ல வாழ்க்கையை அனுபவிப்பார்கள்.'

அந்த ருஷ்ய நாவலின் கிழிந்த பக்கங்கள் எப்படி அந்த இந்தியக் கடையில் வந்து சேர்ந்தது என்று நீங்கள் கேட்கலாம்.

அது ஒரு அழகான கதை. யாராவது ஒருவர் ஒரு நாள் சொல்லக்கூடும்.

அந்த ஏழைப் பெண் சுமையுடன் நடந்து செல்கிறாள். வீட்டை அடைந்ததும் குழந்தைகளுக்குத் தண்ணீர் தருவாள். அவளும் கொஞ்சம் குடிப்பாள். ஆப்பிரிக்காவின் வறட்சி மிகுந்த நாட்களில் புழுதியினூடே அவள் வாழ்க்கை தொடரும்.

நாம் உழைத்துத் தேய்ந்தவர்கள். நம் உலகில் நாம் பயமுறுத்தப்பட்டவர்கள். முரண்பட்டு, வெறுப்பில் தோய்ந்து வாழப் பழகிவிட்டோம். சில வார்த்தைகளை, சிந்தனைகளை நாம் தொட்டுப் பார்த்ததில்லை. அவை வழக்கொழிந்தவையாக ஆகிவிட்டன. ஆனால், வீர்யம் இழந்த சில வார்த்தைகளை மீட்க நாம் பிரயத்தனப்படுகிறோம்.

இலக்கியத்துக்கான பெரும் புதையல் நமக்கு வெளியே இருக்கின்றது. எகிப்தியர்கள், கிரேக்கர்கள், ரோமானியர்கள் தொடங்கி இந்தப் புதையல் எங்கும் பரவிக் கிடக்கிறது. தேடினால் செல்வம் கொழிக்கும் புதையலாக அது மாறிவிடும். யாரெல்லாம் அதிர்ஷ்டசாலிகளோ அவர்கள் தம் தேடலில் வெற்றி பெறுகின்றனர். இத்தகைய புதையல் இல்லாமலிருந்திருந்தால் எத்தகைய வறியவர்களாக, காலிப் பாண்டமாக நாம் இருப்போம்?

மொழிகள் பெரும் மரபுச் சொத்தாகக் கவிதைகளையும் சரித்திரங்களையும் அடக்கிக் கொண்டிருக்கின்றன. அவை தீர்ந்து போகும் சாத்தியம் என்பது எப்போதும் எங்கும் நடக்காது. அவை எப்போதும் எங்கும் உலவுகின்றன.

உயில் எழுதப்பட்டுக் கிடைக்கும் சொத்துக்கள் போல கதைகளும் கவிதைகளும் பழைய கதை சொல்லிகளிடமிருந்து நமக்கு கிடைத்திருக்கின்றன. சிலரின் பெயர் நமக்குத் தெரிந்திருக்கலாம். பலரின் பெயர் தெரிந்திருக்காமலே இருக்கும். ஒரு காட்டைச் சரி செய்யச் செல்லும் இந்தக் கதைசொல்லிகள் காட்டில் பரவும் தீயைப் பார்க்கிறார்கள், நடனமாடுகிறார்கள், பாடுகிறார்கள்.

நமது வம்சாவளி தீயிலும் மந்திரத்திலும் ஆவியிலும் எழுந்தது. இப்போதும் அது அங்கேயே நின்று பிரகாசிக்கிறது.

எந்த நவீனக் கதைசொல்லியையும் கேளுங்கள், அவர்கள் தீயைத் தொட்டவர்கள் என்று கூறுவார்கள். உத்வேகம் என்னும் தீயை. காலத்தின் பல மடிப்புகளுக்குள் சென்று நமது ஆதி பரம்பரை ஆரம்பித்த தினத்திலிருந்து மென்மேலும் வளர்ந்து பெருகி உலகை உருவாக்கிய பெருஞ் செயலை அறிந்தவர்கள் அவர்கள்.

ஒவ்வொருவரின் உள்ளும் ஒரு கதைசொல்லி இருக்கிறான் (ள்).

அந்தக் கலைஞர் நம்முடன்தான் இருக்கிறார். இந்த உலகம் யுத்தத்தால் அதன் பயங்கரத்தால் பாதிக்கப்படுவதாக எடுத்துக்கொள்ளுங்கள். நம் நகரங்களை வெள்ளம் ஆட்கொள்ள கடல் மேலெழுகிறது. ஆனால், கதைசொல்லி அங்கேயே இருப்பார். ஏனெனில், நமது கற்பனை நல்லதையும் கெட்டதையும் நினைத்துப் பார்க்க வழி செய்கிறது. நாம் அடிபடும் போதும், அலைக்கழிக்கப்படும் போதும், ஏன் அழிக்கப்படும் போதும் நம் கதைகள் நம்மை மீண்டும் உருவாக்குகின்றன. கதைசொல்லி என்னும் கலைஞர்தான் நம் கனவின் கடவுள், மாயையை உருவாக்குபவர். பீனிக்ஸ் பறவையைப் போல சாம்பலிலிருந்து உயிர் பெற்று எழும் வல்லமை வாய்ந்தவர்.

புழுதியில் நெடுந்தூரம் செல்லும் அந்த இளம் பெண்ணும் அவளது குழந்தைகளின் கல்வி பற்றிய கனவும் அவளை விட நமக்கு சிறந்த வாழ்வு கிட்டிவிட்டது என்ற எண்ணத்தை உங்களுக்குள் விதைக்கிறதா? வேளைக்கு நமக்குக் கிடைத்து விடும் உணவு, அலமாரி நிறைய அமர்ந்திருக்கும் உடைகள் ஆகியவற்றின் நினைப்பில் புதையுண்டு நம் தேவைகள் பூர்த்தியாகி விட்டன என்று இறுமாந்து கிடக்கிறோமா?

எனக்கென்னவோ அந்த யுவதியும் அவளைப் போன்ற பெண்மணிகளும் புத்தகங்கள் மேல் கொள்ளும் தாகம், மூன்று வேளை உணவு கிடைக்காவிட்டாலும் கல்வி மீது கொண்டிருக்கும் பிரேமை - இவைதான் நம்மைப் பற்றி நமக்கு வரையறுத்துக் காட்டும் என்று நம்புகிறேன். ●

**ஸிந்துஜா <weenvy@gmail.com>**

# கோழி கூவும் பருவம்!

**நடேசன்**



## ஆஸ்திரேலியா

தொழிலாளர் நிலையில் இருந்து விஞ்ஞான ஆய்வாளன் என தொழில் கிடைத்தபோது ஆரம்பத்தில் ஏதோ கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போன்ற நிலை ஏற்பட்டது. எந்த ஒரு வழிமுறையும் இல்லாது, என்னிடம் பொதுமக்கள் நலம் சம்பந்தமான ஒரு ப்ரொஜெக்ட் தரப்பட்டது.

சிட்னிக்கு வடக்கே சில நூறு கிலோமீற்றர் தொலைவில் உள்ள, உல்லாச பிரயாணிகள் செல்லும் நகரம் கொஸ்காபர். இந்த நகரத்தில் வெளியேறும் மனித கழிவுகளின் திண்ணப்பகுதி வடிகட்டப்பட்டாலும் திரவப்பகுதி போசாக்குள்ளது. இந்த திரவக் கழிவு நீர் கடலில் கலக்கும் இடத்தில் கடல்பாசிகள் பெருகிவிடும். இந்த பாசிகளால் கடற்கரைக்கு நீந்திக் குளிக்கவரும் உல்லாச பிரயாணிகளுக்கு இடைஞ்சலாகிறது. இந்தக் கழிவு நீரை கடலில் விடாது மீண்டும் வாழைத் தோட்டங்களுக்கு பீச்சி அடித்து பசளையாக்குவது விவசாயத்துக்குப் பயனுள்ளது. இந்தக் கழிவு நீரினால் ஏற்படும் மொத்தமான பாதிப்பு பற்றி ஆராய்ச்சி செய்வது எனது பொறுப்பு. இதில் வாழை மரங்களில் ஏதாவது தொற்றுகிருமிகள் செல்கிறதா; அது மனிதருக்கு கடத்தப்படுகிறதா என்பதை உறுதிப்படுத்தி தரவுகளுடன் ஆராய்ச்சிகள் செய்ய வேண்டும். வாழை மரத்தின் பகுதிகள் வாரத்தில் ஒருநாள் குளிர்பதனப் பெட்டியில் எனக்கு வந்து சேரும். இந்த பகுதிகளில் உள்ள நுண்ணுயிர்களை அறிவதே தற்போதைய ஆராய்வாக அமைந்தது.



சிட்னியின் மேற்குப்புறத்தில் உள்ள இந்தப் பல்கலைக்கழகத்தில் வேலைக்கு செல்வதற்கு அதிகாலையில் செல்லவேண்டும். அதற்காக முதன்முறைகாக ஒரு கார் வேண்டுவதற்கு எனது நண்பன் பாஸ்கரனுடன் சென்றேன். அக்காலத்தில் சிட்னி பரமற்றா ரோட் எனும் தெருவே மேற்குப்புறத்திற்கு செல்லும் முக்கியமான பாதை. இப்பொழுது நெடும் சாலைகள் எனப்படும் பிரிவேக்கள் வந்ததால் முக்கியத்துவம் குறைந்துவிட்டது. அந்த தெருவிலே அதிகமான கார்களை விற்கும் கடைகள் உள்ளது.

முதல்முறையாக கார்வாங்கிய போதிலும் அதிகம் யோசிக்கவில்லை. இது நல்லது என்று பாஸ்கரன் காட்டிய கொண்டா சிவிக் என்ற இரண்டாம் தரமான

காரொன்றை, வெள்ளை ஸ்ரேசன் வாகனென்றை வாங்கினேன். அந்தக் காருக்கான பணம் முழுவதும் எனது மூன்று மாத பெயிண்ட பக்டரி வேலையில் வந்தது. வேர்வை சிந்திய உழைக்கவில்லை என்று சொன்னாலும் ரசாயனத் திரவியங்களை சுவாசித்து வந்த பணம். பிற்காலத்தில் பலமடங்கு தேடிய பணத்திலும் அந்த மூன்று மாதங்கள் உழைத்த பணத்திற்கு அதிக பெறுமதியுண்டு.

பல்கலைக்கழகத்தில் வேலை செய்வது வித்தியாசமான அனுபவம். எவரும் என்னைக் கேட்பதில்லை. மாதமொருமுறை முடிவுகளைக் கொடுக்கவேண்டும்.

எனது ஆய்வில் முக்கிய நோக்கமாக, வாழைப் பழத்திலோ அல்லது இலைகளிலோ டைபாயிடை உருவாக்கும் சல்மனெல்லா என்ற பக்டீரியா உள்ளதா என பார்ப்பது; அவற்றோடு மனித மலத்திற்குரிய குறியீடாக பார்க்கும் ஈகோலை பக்டீரியாக்களையும் எண்ண வேண்டும். அவைகளின் தொகையை சிட்னியின் முக்கிய சந்தையான பிளமிங்ரன் சந்தையில் உள்ள வாழைப்பழங்களில் உள்ளவையோடு ஒப்பிட்டு பார்க்கவேண்டும்.

1989 மார்கழி மாத இறுதியில் எனது பத்துமாத ஆய்வில் மனிதக் கழிவில் விளைந்த வாழைப் பழங்களிலோ பிளமிங்டன் சந்தையில் வாங்கிய பழங்களிலோ எந்த ஒரு சல்மனெல்லாவையும் பார்க்கவில்லை என்பதுடன் மலத்தில் காணப்படும் ஈகோலாய் எனப்படும் பக்டீரியா, பிளமிங்டன் சந்தை பழத்தில் அதிகமானது என்பதேயாகும்.

இந்த ஆய்வு செய்த காலத்தில் எனது மிருக வைத்தியத்திற்கான ஒரு பகுதி பரீட்சையைப் படித்து பாஸ் பண்ணிருந்தேன். மேலும், எனது ஆய்வு முடிந்தவிடுகிறது அதன் பின்பு வேலை இல்லை. இதனால் பல இடங்களில் வேலைக்கு விண்ணப்பித்தேன்.

ஒருநாள் ஆஸ்திரேலிய அரசின் பிரதான விஞ் ஞானப் நிறுவனத்தில் இருந்து நேர்முகத்திற்கு அழைத்திருந்தார்கள். அதில் ஆய்வு செய்தபடி எனக்கு பிஎச்டி பட்டத்திற்கான படிப்பை தொட வேண்டும். பணந்தந்து படிக்க சொல்லும்போது கசக்குமா?

நானும் கோட்டு, ரை எல்லாம் அணிந்துகொண்டு நேர்முகத்திற்கு போனேன். அங்கிருந்துவர்களில் பிரதான விஞ்ஞானி இந்தியர் உருவம் கொண்டவர். மற்றய இருவர் ஐரோப்பிய, ஆஸ்திரேலியர்கள். என்னிடம் சில கேள்வி கேட்டுவிட்டு, நீரே இதற்கு சரியானவர் உங்களுக்கு கடிதம் வருமென்றனர். நம்பிக்கையுடன் இருந்தேன். இரண்டு வாரங்களாக வரவில்லை.

என்னிடமிருந்த தொலைபேசியில் அந்த இந்திய விஞ்ஞானியிடம் விசாரித்தபோது அவர் சொன்னார்: "ஏற்கனவே மிருக வைத்திய பரீட்ச்சை பாஸ் பண்ணிவிட்டீர். அதனால் எமது வேலைக்கு வரமாட்டீர் என நினைத்து வேறு ஒருவரை தெரிவு செய்கிறோம்."

எனது சப்த நாடிகள் அடங்கிவிட்டது. அவருக்கு பதில் சொல்லாமல் தொலைபேசியை வைத்தேன்.

எனது ப்ரொஜெக்ட் மேலாளரான பேராசிரியர் பாமரை போய் சந்தித்து, "என்ன நடந்தது" என்றேன்.

"உம்மை பற்றி நன்றாகச் சொன்னேன். ஆய்வு வேலைகளை செய்தபடியே மிருகவைத்திய பரிட்சையும் பாசாகினீர் என உம்மைப் பற்றி சொன்னேன்." எனது புளியங்கூடலைச் சேர்ந்த நண்பன் சிறு வயதில் சொன்னதுபோல் அப்பாவியாகச் சொன்னார்.

அப்பொழுதுதான் எனக்கு புரிந்தது, என்னை பற்றி நன்றாக சொல்ல நினைத்து சொல்லிய விடயம், எனக்கு கிடைக்கவிருந்த வேலை, ஸ்கொலர்சிப் - பிஎச்டி - டாக்டர் பட்டம் எல்லாம் காற்றில் பறந்தது.

மீண்டும் நத்தார் விடுமுறை காலங்களில் வேயைற்றவனாகினேன். நத்தார் விடுமுறை காலங்கள் என்னளவில் கொடுமையானவை. ஆஸ்திரேலியாவில் கொண்டாட்ட காலங்கள். அக்காலத்திலே மட்டும் வருட விற்பனையில் 70 வீதமான விளையாட்டுப் பொருட்கள் விற்பனையாகும். மிகவும் பெரிய விளம்பரங்கள் குழந்தைகளை மட்டுமல்ல பெற்றோரையும் கவரும். அந்தக் காலத்தில் வறுமையாக இருப்பது மற்றக் காலங்களிலும் கொடுமையானது. ஏதாவது தொலைக்காட்சியைப் பார்த்து காலம் தள்ளுவோம் என்றால் பழைய நிகழ்வுகளை மீண்டும் காட்டுவார்கள். அல்லது பத்துக் கட்டளைகள் போன்ற திரைப்படங்களால் தொலைக்காட்சியை நிரப்புவார்கள்.

கவிஞர் டி.எஸ். எலியட்டின் 'ஏப்பிரல் கொடுமையானது' என்ற கவிதையை நான் திருப்பிப் போட்டு அக்காலத்தில் 'மார்கழி கொடுமையானது' எனப் படிப்பேன்.

இந்தக் காலத்திலே எனது முதலாவது கட்டுரையை, நண்பர் முருகபூபதி நடத்திய 'மக்கள் குரல்' என்ற கையெழுத்துப் பத்திரிகைக்காக எழுதினேன். அதுவும் எதைப் பற்றித் தெரியுமா?

இந்திய ராணுவம் இலங்கையில் இருந்த காலத்தில் இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை ஆதரித்த மிகச் சிலரில் நான் ஒருவன். இந்தியாவின் ஒருமைப்பாடு எதிர்காலத்தில் மதத்தாலோ மொழியாலோ அல்லது கலாச்சாரத்தாலோ காக்கப்படாது; தேசிய முதலாளிகளால் மட்டுமே காப்பாற்றப்படும் என எழுதினேன். காஸ்மீரில் இருந்து கன்னியாகுமரி வரையுமுள்ள நுகர்வோரை எந்த முதலாளியும் தவறவிடமாட்டான். ஒரு நாட்டில் தேசிய முதலாளித்தும் தன்னை மட்டுமல்ல நுகர்வோரையும் ஒன்றாக வைத்திருக்க வித்தியாசமான வடிவங்களை எடுக்கும். தற்போதுகூட காங்கிரசால் உருவாக்கப்பட்ட இந்த வர்க்கத்தை, காங்கிரஸ் தன்னுடன் வைத்திருக்க தவறிவிட்டதால் அது இப்பொழுது வேறு கட்சியை ஆதரிக்கிறது.

## இலங்கை

எனது அப்பு (தந்தை) 1969ஆம் ஆண்டின் பிற்பகுதியில் ஒரு சனிக்கிழமை காலை நேரத்தில்,



ஊரில் இருந்து எனக்காகக் கொண்டு வந்த மதிய உணவை எனது படுக்கைக்கு அருகில் உள்ள சிறிய அலுமாரியைத் திறந்து வைத்துவிட்டு, வேகமாக அதன் கதவை அடித்து மூடினார். பின்னர், என் பக்கம் திரும்பிப் பார்த்தார். அவரது முகம் மாறியிருந்ததை கவனித்தேன். ஏதும் கோபமோ அல்லது ஏமாற்றமோ எனச் சரியாகத் தெரியவில்லை.

எனது அலுமாரியின் உட்பக்க கதவில் ஒரு தமிழ்த் திரைப்பட நடிகையின் நீச்சல் உடை அணிந்த வண்ணப் படமிருந்தது. அந்தப் படமே அவரது முகமாற்றத்திற்கான காரணம் என அப்பொழுது நினைத்தேன்.

ஒவ்வொரு கிழமையும் எழுவை தீவுக்கு வெள்ளிக்கிழமை சென்று, மீண்டும் ஞாயிற்றுக்கிழமை யாழ். இந்துக் கல்லூரி விடுதிக்கு வருவேன். யாழ்ப்பாணம் வந்து சேர்ந்ததும் கடிதமெழுத வேண்டும் என்பது அம்மாவின் கட்டளை. ஆனால், நான் சோம்பேறி; கடிதமெழுதுவதில்லை.

அம்மா ஊரில் அக்காலத்து தபாலதிபராக இருந்தவர். கடிதங்களுடன் வாழ்பவர். இறுதியில் தானே ஒரு அஞ்சல் அட்டையில் வீட்டு விலாசமெழுதி, “நலமே வந்து சேர்ந்தேன்“ என்று ஒரு வரியும் எழுதி எனது பொக்கெட்டில் வைத்து வழியனுப்பிவிடுவார். விடுதிக்கு வந்து சேர்ந்ததும் அந்த அஞ்சல் அட்டையை கல்லூரியில் உள்ள தபால் பெட்டியில் போடவேண்டும். அவ்வாறு போட மறந்த நாட்களும் உண்டு.

வார விடுமுறை நாட்களில் நான் ஊருக்கு செல்லாதபோது, அப்பு, யாழ்ப்பாணத்திற்கு என்னைத் தேடி வந்துவிடுவார். அவ்வாறு அவர் வந்த ஒரு நாளிலேதான் அச்சம்பவம் நடந்தது.

இந்துக் கல்லூரியில் 9ஆவது தரத்தில் படித்த காலத்திலே எனக்கு கூவும் பருவம் வந்தது. சாதாரணமாகப் பருவம் அடைந்த பெண் பிள்ளைகளுக்கு ஊரைக் கூட்டிக் கொண்டாடும் நமது சமூகம் பையன்களைப் பொருட்படுத்துவதில்லை. சமூகத்திற்குள் ஆபத்தான ஒருவன் வந்துவிட்டான் என்ற எச்சரிக்கையுடன், அவனது உடலில் தோன்றும் இயற்கையான பருவமாற்றத்தை அடக்கி வைக்கிறது. பெண்களிடமிருந்து ஒதுக்கியும் பிரித்தும் வைக்கிறது. பெற்றோர் கூட தங்களது காமத்தின் விளைவுதான் இந்தக் குழந்தை என்பதை நினைப்பதுமில்லை. அவன் பருவமடைந்து வயதுக்கு வருகிறான் என்ற உண்மையைப் பல காலம் மறந்துவிடுகிறார்கள். இதனால் அப்பருவத்துப் பையன்கள், மனநிலையில் குடும்பத்திலும் சமூகத்திலுமிருந்து அந்நியப்படுகிறார்கள். அவர்களது நடவடிக்கைகளை பெற்றோர், முக்கியமாக தந்தையர் கண்டிக்கும்போது அவர்களே பையன்களின் நம்பியார்களாக வெறுக்கப்படுகிறர்கள். இந்தப் பருவமே பிற்காலத்தில் அவனை ஆக்கத்திற்கு அல்லது அழிப்பதற்கான ஒரு சந்தர்ப்பத்தை உருவாக்குகிறது.

எனது ஒன்பதாம் வகுப்பில் என்னோடு படித்த ஒருவன், இரவில் அவனது பெற்றோர் கலவியில்

ஈடுபட்டதைக் கண்டுவிட்டு, அந்தக் காட்சியை எமது வகுப்பில் எங்களுக்கு நாடகமாக விவரித்தான். அதனை அங்கிருந்த நாற்பது பேரும் ஆவலோடு வாய் மூடாது கேட்டோம். பிற்காலத்தில் அதை நினைத்து வெட்கப்பட்டேன். பாடசாலையோ சமூகமோ தெளிவான அறிவைக் கொடுக்கத் தவறும்போது எனது வகுப்பிலிருந்த நண்பன் மட்டுமல்ல, அவன் சொல்வதை ஆவலுடன் கேட்ட என் போன்ற மனநிலை கொண்டவர்கள் உருவாகுவது தவிர்க்க முடியாதது.

அக்காலத்தில் எனது உடலில் உற்பத்தியாகிய ஹோர்மோன்களால் பருவமாற்றங்கள் ஏற்பட்டபோது, கற்பதில் என் சிந்தனை குறைந்தது. அதுவரையும் முதலாவது தரத்திலிருந்த நான், பின் தள்ளப்பட்டேன். ஆண்கள் - பெண்கள் சேர்ந்து படிக்கும் கலவன் பாடசாலையில் இலவச இணைப்பாகப் பெண்களைக் காணமுடியும். பழக முடியும். கெட்டித்தனம் இருந்தால் தொடவும் முடியும். ஆனால், இந்துக் கல்லூரி போன்ற ஆண்கள் மட்டும் படிக்கும் கல்லூரியிலும், தங்கியிருந்த விடுதியிலும் இருபத்தினான்கு மணிநேரமும் ஆண்களையே பார்த்தபடி இருக்கும் வாழ்வு கடினமானது. அந்த விடலைப் பருவத்தின் ஹோர்மோன் இரத்தத்தில் பொங்கிப் பாய்ந்தபோது பல மாணவர்கள் பல விதமாக நடந்தார்கள்.

என்னிலும் இரண்டு வயது மூத்தவர் பாடசாலை முடிந்ததும், இந்துக் கல்லூரியின் ஜன்னல் கம்பிகளிடையே கால்களை வைத்தவாறு அமர்ந்தபடி வீதிக்கு எதிரே தெரியும் வீட்டுப் பெண் பிள்ளையைப் பார்ப்பார். மாலைச் சூரியன் மறைந்து இருளாகும்வரை அவ்வாறு பார்த்துக்கொண்டிருப்பார்.

ஒவ்வொரு நாளும் குறைந்தது இருமணி நேரத்தவமாக அது அமையும். புராண, இதிகாச காலமானால் அவருக்கு வரமோ, அஸ்திரமோ கிடைத்திருக்கும். இந்துக் கல்லூரி ஆசிரியர் ஒருவரின் மகனாகிய அவருக்கு இறுதிவரையில் அந்தப் பெண்ணின் கடைக்கண் பார்வை கூடக் கிடைக்கவில்லை என்பது கவலையான விடயம்.

விடுதியின் கீழே உள்ள வீதியில் பாடசாலை முடிந்து பெண்பிள்ளைகள் சென்றால், கூச்சலும் விசிலுமாக இருக்கும். சிலர் ஆண்களைத் தேடுபவர்கள். அவர்களில் சிலர் காதலர்கள் போல் ஒன்றாகத் திரிவதும், பணம் கொடுப்பதையும், தமக்குள் சண்டை பிடிப்பதையும் பார்த்தபோது எனக்கு வினோதமாக இருக்கும்.

எனக்கு விடலைப் பருவத்துக்கு வடிகாலாக சினிமா இருந்தது. சிலகாலத்தின் பின்பு அந்தக் காலத்து தமிழ்ப் படங்கள், பாலைவனத்தைப் பகலில் தாண்டி வந்தவனுக்கு தாகசாந்தி செய்ய தீர்த்தம் கொடுப்பது போலிருந்தது. அதனால், ஆங்கிலப் படங்களைப் பார்க்கத் தொடங்கினேன். அக்கால யாழ்ப்பாணத்தில் 'மனோகரா', 'ரீகல்' என இரண்டு திரையரங்கங்களில் ஆங்கிலப் படங்கள் ஓடிக்கொண்டிருக்கும். பல படங்களை பலமுறை பார்த்தேன். அந்தப் படங்களில் பேசுவது புரியாது. திரைப்படத்தின் மற்றைய தரங்கள் அறியாது. எப்பொழுது பெண்கள் வருவார்கள்? குளிப்பார்கள்? அல்லது நீச்சலடிப்பார்கள்? எப்பொழுது நமக்கு ரசிக்கக்கூடிய காட்சி வரும் என்ற எதிர்பார்ப்புகளோடு முன்வரிசையில் கழுத்தை நிமிர்த்தியபடியிருப்பேன்.

எங்கள் காலத்தில் எவனாவது இது தவிர வேறு எதற்காகவேனும் ஆங்கிலப்படம் பார்த்தானென்றால், அவன் அரிச்சந்திரனுக்கு அடுத்த வீடென நினைக்கவேண்டும். பல தடவைகள் பகல் காட்சிகளை நண்பர்களுடனும் சில தடவைகள் தனியாகவும் பார்த்திருக்கிறேன்.

ஹோர்மோன்களின் கொடுங்கோலாட்சி கிட்டத்தட்ட இரண்டு வருடங்கள் நீடித்தது. இக்காலத்தில் கல்வி மட்டும் சுமையாக இருக்கவில்லை. வகுப்பில் படிப்பித்த ஆசிரியர்களது, உடன் படித்த நண்பர்களது நினைவுகள் கூட மனதில் இருக்க மறுத்து, செட்டைகட்டி பறந்த காலம். இக்காலத்திலேதான் பத்தாவது தரத்திற்கான பொதுப் பரீட்சை வந்தது. எனது தலைக்குள் சரக்கில்லை. ஆனால், பரீட்சை எழுதவேண்டும்.

எப்படி எழுதமுடியும்? அதுவும் மூன்று விதமான கணித பாடம் மற்றும் ஆங்கிலம் உட்பட எட்டுப் பாடங்கள் எழுதவேண்டும்.

1970ஆம் வருடம் மார்கழியில் யாரோ ஒரு புண்ணியவானது முயற்சியால், பல பாடங்களதும் வினாத்தாள்கள், முதல்நாள் இரவு எங்கள் இந்துக் கல்லூரி விடுதிக்கு வந்து கண் சிமிட்டின

## இந்தியா

இரண்டு நாட்கள் ஹோட்டலில் இருந்துவிட்டு கோடம்பாக்கத்தில் ஆற்காடு சாலையில் இருந்த பழைய கட்டிடத்தில் மேலே உள்ள சிறிய அறையை மாத வாடகைக்கு பெற்றுக்கொண்டேன்.

அந்த அறையில் யன்னலையும் கதவையும்விட பெரிய இரும்புக்கட்டில், சந்தமிட்டபடி சுழலும் ஒரு பழைய கறள் பிடித்த காற்றாடி, அதோடு ஒட்டிய ஒரு லைட் மட்டுமே எனக்குத் துணையாக இருந்தன. தனிமை அந்த அறையில் கோடை வெப்பத்தைவிட மோசமாக வாட்டியது. அந்தப் பெரிய சென்னைப்பட்டணத்தில் தனிமையாக இருப்பதாக உணர்ந்தேன். குடும்பம், சுற்றம், நண்பர்களது அருமையை உணர்வதற்கு அந்தக் காலம் தேவையாக இருந்தது.

தேவையில்லாமல் இலங்கையை விட்டு வெளிக்கிட்டுவிட்டேனோ என்ற சிந்தனை தொடர்ச்சியாக, கடல் அலை பாறையில் மோதுவது போல், மோதிக் கொண்டிருந்தது. இலங்கையில் சிறிதளவு இருந்த சிகரட் புகைக்கும் பழக்கம் ஊதிய பலூனாக பெரிதாகியது. ஆற்காடு சாலையில் அருகே இருந்த லெண்டிங் லைப்ரரியில் இருந்த சுஜாதா, ராஜேந்திரகுமார், புஷ்பா தங்கத்துரை போன்றவர்களது புத்தகங்கள் உற்ற துணையாக உதவி செய்தன.

ஒருநாள் இரவு, எனது மனைவி இலங்கையில் வேலை செய்யும் குருநகரில் உள்ள ஹோலி குறோஸ் வைத்தியசாலையின் மீது குண்டுகள் விழுவதாகவும், அங்குள்ளவர்கள் உயிர்தப்ப சிதறி ஓடுவதாகவும்



கனவு கண்டு எழுந்து அழுதேன். கனவுகள் கண்ணீர் என்பது எனக்கு நினைவு தெரிந்த காலத்தில் மிகவும் அருமையாக இருந்தது. மத்தியதர குடும்பத்தில் மூத்த பிள்ளையாக பிறந்தது ஒருவித அதிஷ்டமே.

மனதில் நினைத்தவுடன் இந்தக்காலம் போன்று பேசுவதற்கு தொலைபேசியில்லை. வேறு வழியுமில்லை. கனவுகள் நடக்காது என்பதில் நம்பிக்கை வைத்து, அன்று நடுஇரவில் எழுந்து ஒரு வில்ஸ் சிகரட்டை புகைத்தபோது ஜுலை 83 நினைவுக்கு வந்தது.

மதவாச்சியில் வேலை செய்த நான், கொழும்பில் ஜுலை 21ஆம் திகதி அனுராதபுர மாவட்டத்தில் உள்ள மிருக வைத்தியர்களுடன் கிராமிய தொழில்துறை அமைச்சர் தொண்டமானின் அலுவலகத்தில் நடந்த கூட்டத்தில் பங்கு பற்றினேன். அக்காலத்தில் பல அபிவிருத்தித் திட்டங்கள் அனுராதபுரத்தில் நடந்தபோதும், ஐக்கிய தேசிய கட்சி ஆட்சியில் இருந்ததால், மதவாச்சி மைத்திரிபால சேனநாயக்கவின் தொகுதியானதால் புறக்கணிக்கப்பட்டது. இவர் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியைச் சேர்ந்தவர்.

இலங்கையில் தமிழர்கள் மட்டும் புறக்கணிப்படுவதாக குறை கூறினாலும், உண்மையில் எந்த அரசாங்கமும் எதிர்க்கட்சி ஆதரவாளர்களையும் அவர்களது தொகுதியையும் கண்டுகொள்வதில்லை. சிங்களவர்கள் இதற்கு அரசியல் சாயம் பூசும்போது, தமிழர்கள் நித்தமும் அரசாங்கங்களுக்கு எதிராக இருப்பதால் இனச்சாயம் பூசுவதுதான் உண்மை.

எனது காலத்தில் பலத்த எதிர்ப்புகளுக்கு மத்தியில் மதவாச்சி - பதவிய ஆகிய இரண்டு இடத்திலும் பால் சேகரிக்கும் நிலையமும், புதிதாக மதவாச்சியில மிருக வைத்தியசாலையும் எனது முயற்சியால் திறக்கப்பட்டன. அனுராதபுர மாவட்ட அபிவிருத்தி கூட்டங்களில் மைத்திரிபால சேனநாயக்கா கலந்து கொள்வதில்லை. எனவே மிருக வைத்திய, கால்நடை அபிவிருத்தி விடயங்களில் மதவாச்சி மக்கள் பிரதிநிதி நீதான் என அக்கால மாவட்ட அமைச்சர் சந்திரபண்டார ஒரு நாள் எனது கையை பிடித்தபடி சொன்னார். ஒருவிதத்தில் இருபத்தைந்து வயதான என்னை மதித்து அவர் பேசியது எனக்கு உற்சாகத்தைக் கொடுத்ததுடன், எக்காலத்திலும் அரசியல்வாதிகளுடன் நேரடியாக பேசக்கூடிய தைரியத்தையும் அளித்தது அந்தக் கூட்டங்களே.

கொழும்பில் நடைபெற்ற இப்படியான கூட்டமொன்றில் கலந்துகொண்ட பின்னர், கூட்டத்தில் கலந்துகொண்டவர்கள் வெள்ளிக்கிழமை நின்று வார இறுதி நாட்களில் கொழும்பில் தங்கியிருக்க விரும்பினார்கள். என்னோடு வந்த மற்றைய அனுராதபுர மாவட்ட வைத்தியர்கள், என்னையும் தங்களுடன் நிற்கும்படி வலியுறுத்தினார்கள். உண்மையில் அனுராதபுரம் போன்ற இடத்தில் இருந்து கொழும்பு சென்றால் நகரவாழ்வை அனுபவிக்க விரும்புவது இயற்கை.

எனக்கு, எனது மகனது முதலாவது பிறந்த நாள் ஜுலை 25ஆம் திகதி வருவதால் யாழ்ப்பாணம் செல்லவேண்டும் என்று 21ஆம் திகதி மாலையே வெளிக்கிட்டபோது, சக மிருகவைத்தியர் களுவாராய்ச்சியின் அனுராதபுர வீட்டின் ஒரு சாவியை பெற்றுக்கொண்டேன். 'இரவு நடுச்சாமத்தில் அனுராதபுரத்தில் தங்கியிருந்து பின்னர் யாழ்ப்பாணம் செல்ல விரும்புகிறேன். எனவே, உனது வீட்டில் தங்கிச் செல்கிறேன்" என்றபோது அவனும் தந்தான்.

நான் நேரடியாக கொழும்பில் அல்லது கண்டியில் இருந்து யாழ்ப்பாணம் செல்வதில்லை என்ற விடயத்தை பாதுகாப்பு நடவடிக்கையாக பலகாலமாக கடைப்பிடித்து வருகிறேன். கொழும்பில் இருந்து யாழ்ப்பாணம் செல்பவர்கள் - இராணுவத்தால் பரிசோதிக்கப்படுவதும் விசாரிக்கப்படுவதும் அக்காலத்தில் நடக்கும் வழமையான விடயங்கள்.

நான் கொழும்பில் அல்லது கண்டியில் இருந்து அனுராதபுரம் அல்லது மதவாச்சி செல்லும்போது அந்த மார்க்கத்தில் பெரும்பாலும் சிங்கள மக்களே பிரயாணம் செய்வார்கள். மேலும், அங்கிருந்து வவுனியாவிற்கு செல்லும்போது வாகனங்கள் நிறுத்தப்படுவதோ சோதிக்கப்படுவதோ இல்லை. பயண நேரம் கொஞ்சம்கூட எடுத்தாலும் இது வசதியானது.

மீசையில்லாமல் ஆங்கிலப் பத்திரிகையோடு பிரயாணம் செய்யும்போது பலரும் சிங்களவராக நினைத்து பேசியபடி வருவார்கள். அதிகம் பேசாமல் ஓரிரு வார்த்தைகளில் பத்திரிகையில் என்னைப் புதைத்துக் கொள்வேன். மீசையற்ற முகம், நல்லெண்ணை வைக்காத தலை, சிங்கள மொழியில் கொஞ்சம் பரிச்சயம் என்பன எனது பாதுகாப்பு கவசங்கள் என எனக்குள் ஒரு நினைப்பு அக்காலத்தில் இருந்தது.

81ஆம் ஆண்டு என நினைக்கிறேன். கண்டியில் இருந்து வாகனத்தில் அனுராதபுரம் செல்லும்போது, மாத்தளையருகில் வரும்போது மாலை 6 மணி சிங்களச் செய்தியில் இரண்டு பொலிசார் கொலை செய்யப்பட்டதாக சொன்னபோது, அந்த வாகனத்தில் இருந்த சில சிங்கள இளைஞர்கள் எழுந்து கோபத்தில், "தமிழர்களை கொல்லவேண்டும்" எனச் சொல்லியவாறு சுற்றி சுற்றிப் பார்த்தார்கள். நான் சாரதிக்கு பின்புறமாக இருந்தேன். இதைக் கேட்டதும் 'சன்' ஆங்கிலப் பத்திரிகையை தூக்கியபடி, "ஏக்கத்தமாய்" என்ற ஒரு வார்த்தையை மட்டும் சொல்லிக்கொண்டு எழும்பினேன். அவர்களும், "ஏக்கனே மாத்தயா" என்றார்கள். அந்தச் செய்தி

முடிந்ததும் அந்த இளைஞர்களது கோபம் திறந்த ஷம்பேயின் போத்தலின் சத்தமாக அடங்கியது. நானும் தொடர்ச்சியாக 'சன்' பத்திரிகையை படித்தபடி பிரயாணத்தை அனுராதபுரம்வரை தொடர்ந்தேன்.

அன்று இரவு அனுராதபுரத்தில் உறங்கினேன். அருகில் இருந்த களுவாராய்ச்சியின் உறவினர்கள் எனக்கு ஏற்கனவே பழக்கமானவர்கள் என்பதால், மறுநாள் காலையுணவை அவர்களுடன் அருந்திவிட்டு, மதவாச்சி சென்று, எனது வைத்தியசாலையில் சில விடயங்களை முடித்துவிட்டு, எனது அலுவலக மோட்டார் சைக்கிளை எடுத்துக்கொண்டு யாழ்ப்பாணம் புறப்பட்டேன். அங்கு சென்றடைவதற்கு இரவு எட்டுமணியாகிவிட்டது. வீட்டில் இரண்டு நாளில் பிறந்த தினம் கொண்டாட இருந்த மகனுடன் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தபோது வைத்தியசாலையில் இருந்து வந்த மனைவி, "யாழ்ப்பாணம் ரவுணில் கேக்கிற்காக ஓடர் கொடுத்திருக்கு" என்றாள்.

மறுநாள் காலை எழுந்ததும் யாழ்ப்பாணம் வைத்தியசாலையில் வேலை செய்யும் அவளை அங்கு விட்டுவிட்டு, கேக்கை எடுத்துவருது எனது வேலையாகியது.

அந்த இரவு என்னை பொறுத்தவரை சந்தோசமாக இருந்தது. கிழமைக்கு ஒரு முறை மனைவியையும் குழந்தையையும் பார்க்கும் அரசாங்க உத்தியோகத்தனது வாரவிடுறைகள் வேறு எப்படி இருக்கும்?

எந்த ஒரு கவலையும் இல்லாத, எதிர்காலம், நிகழ்காலம் என்று எதைப்பற்றிய சிந்தனையும் அற்ற வாழ்க்கை. இரண்டு வருமானம். யாழ்ப்பாணம் வந்தால் ஓடுவதற்கு மாமாவின் கார். வசதியான வீடு. அப்படியே கொக்குவிலில் எங்கள் வீட்டிற்குச் சென்றுவிட்டு, அதற்குப் பின்னர் ஆனைக்கோட்டைக்கு நண்பனுடன் சென்று கள்ளு அருந்திவிட்டு வரும்போது, அந்த இரண்டு நாட்களும் எப்படிப் போகும் எனத் தெரியாமல் வாழ்ந்தகாலம் வசந்தகாலம்தான்.

சனிக்கிழமை மனைவியை வேலைக்கு அழைத்துச் செல்வதற்காக எழுந்து காலை எட்டு மணியளவில் யாழ்ப்பாணம் ரவுணுக்கு புறப்பட்டேன். எனது மோட்டார் சைக்கிளில் யாழ்ப்பாணம் பிரதான வீதியால் சென்று ஆஸ்பத்திரி வீதியை அடையும் வரை எல்லாமே வழமைபோல் இருந்தது. வைத்தியசாலைக்கு முன்பாக சென்றபோது அனுராதபுரத்தில் எனது மேலதிகாரியான டொக்டர் பத்மநாதன் - அவரது வீட்டின் முன்பாக நின்றவாறு எனக்கு கையை காட்டினார். நான் அவருக்கு கையை அசைத்தபடி வைத்தியசாலை முன்பு மோட்டார் சைக்கிளை நிறுத்தினேன். எனது மனைவி வைத்தியசாலையுள்ளே நூழைந்து விட்டாள்.

சுற்று வட்டாரத்தில் ஏதோ மாற்றம் தெரிந்தது. வைத்தியசாலைக்கு முன்பாக இரண்டு பக்கமாகச் செல்லும் வீதியின் நடுவே வாடகைக்கார்கள், மினி பஸ் வண்டிகள் என குறைந்தது அரை கிலோ மீட்டர் தூரத்திற்கு நிறுத்தியிருப்பார்கள். அதாவது வேம்படி வீதியில் இருந்து காங்கேசன்துறை வீதி வரையும் உள்ள இந்த இடம் வாகனங்கள் நிறுத்தும் பிரதேசமாகவிருந்தது. ஆனால், அன்று எந்த வாகனமும் எனது கண்ணுக்குத் தெரியவில்லை கண்ணுக்கெட்டியவரை வெளியாக இருந்தது. மேலும், கண்ணாடித் துண்டுகள் சிதறி எனக்குப் பக்கத்தில் நிலமெங்கும் கிடந்தது. ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்த என்னை யாரோ பெயர் சொல்லிக் கூப்பிட்டார்கள். மேலே பார்த்தபோது என்னுடன் படித்த டொக்டர் ஜெயச்சந்திரன் நண்பர்களுடன் டொக்டர்கள் விடுதி பல்கனியில் நின்றபடி, "உள்ளுக்கு வாடா. இல்லையேல் உடனே வீடு செல்" என்றான்.

அவனது வார்த்தைகள் கேட்டாலும் அர்த்தம் புரியாமல் சிரித்தபடி நின்றபோது, "மீண்டும் ஆமிட்ட அடிவாங்கப் போகிறாய் உடனே போ" என்றான்.

சுற்றிவர எவரும் இல்லை. ஏதோ அசம்பாவிதம் நடந்துவிட்டது என நினைத்துக்கொண்டு எனது மோட்டார் சைக்கிளை திருப்பிக்கொண்டு டொக்டர் பத்மநாதன் வீடு சென்றேன்.

"உனக்கு விடயம் சொல்லத்தான் மறித்தேன். இரவு பெடியங்கள் சில ஆமிக்காரரைக் கொன்றுவிட்டார்கள் என்ற ஆத்திரத்தில் ஆமி வந்து இங்குள்ள பல கார்களை அடித்து நொருக்கியது. பிள்ளையார் விலாஸக்குச் சொந்தமான வேனும் நொறுக்கப்பட்டது. மீண்டும் வருவார்கள் என்பதால் வீதிகள் எங்கும் வெறிச்சோடிக் கிடக்கிறது. இன்று எந்தக் கடையும் திறக்கமாட்டார்கள்" என்றார் பத்மநாதன்.

மகனுடைய பிறந்தநாள் கேக்கை மறந்துவிட்டு குறுக்குவழியால் சுண்டிக்குழி சென்று விடயத்தை மாமா, மாமியிடம் சொன்னேன்.

இப்பொழுது மனைவி மாலையில் வேலை முடித்து எப்படி வீட்டுக்கு வருவாள் என்ற கவலை மனதில் படிந்துகொண்டது. வைத்தியசாலையில் இருக்கும்வரையும் பாதகமில்லை. வரும் வழியில் ஏதாவது நடக்காமல் இருக்கவேண்டும் என நினைத்துக் கொண்டிருந்தோம்.

மாலையில் எனது மனைவி வந்ததுமல்லாமல் அந்த கேக்கையும் கொண்டு வந்தாள்.

"எப்படி வந்தாய்?" எனக்கேட்டேன்.

"நடந்துதான்" என்றாள்.

பல விதத்தில் ஆண்களைவிட பெண்கள் தைரியசாலிகள் என புரிந்துகொண்டேன். ராணுவத்திற்குப் பயந்து நான் கேக்கை விட்டுவிட்டு வந்தாலும், தனது மகனுக்காக கேக்கை எடுத்துக்கொண்டு குறைந்தது மூன்று கிலோ மீட்டர் தூரம் நடந்து வந்ததன் காரணம் தாய்மையா அல்லது பெண்களுக்குரிய அசாத்திய துணிவா அல்லதுயதார்த்த நிலைமையை புரிந்துகொள்ளாத அறியாமையா?

எனது மகனின் பிறந்த நாள் ஞாயிற்றுக்கிழமை அன்று இரண்டு குடும்பங்களுடன் நடந்தது.

24ஆம் திகதி இரவு கொழும்பில் நடந்த எந்தச் சம்பவங்களும் தெரியாமல் - நான் திங்கட்கிழமை காலை வழமைபோல் எழுந்து - அரசாங்க மோட்டார் சைக்கிளில் மதவாச்சி சென்றேன். வழி எங்கும் எதுவித தடைகளும் இருக்கவில்லை. ஐக்கிய தேசியக் கட்சியின்



முக்கியஸ்தர்களில் ஒருவரான கந்தசாமி என்ற பிரமுகர், பருத்தித் துறைத் தமிழர் அந்தப் பிரதேசத்தில் இருந்ததால் அங்கு பாரதூரமான சம்பவங்கள் எதுவும் நடைபெறவில்லை.

எனது மகனின் பிறந்தநாள் இல்லாமல் இருந்திருந்தால், நான் நிச்சயமாக கொழும்பில்தான் நின்றிருப்பேன். வானுலத்தில் இருந்துதான் இந்த சுய வரலாறு எழுதியிருக்க வேண்டியிருக்கும்.

சென்னை.. அடுத்தநாள் என்னிடம் இருந்த ஒரே ஒரு விலாசத்தில் இருந்தவர்களிடம் சென்று உதவி கேட்பது என நினைத்தேன். எனது மனைவியின் சகோதரன் தந்த முகவரியில் உள்ளவர்கள் ஏற்கனவே எனக்கும் தெரிந்தவர்கள். என்னோடு இந்துக் கல்லூரியில் படித்து, பேராதனை பல்கலைக்கழகம் சென்று என்ஜினியராக தற்பொழுது அமெரிக்காவில் வசிக்கும் செல்வகுமாரின் தந்தையான காசி விஸ்வநாதன் மாஸ்டரின் வீடு அமைந்தகரையில் இருந்தது. ஓட்டோவில் மாஸ்டரின் வீட்டைத் தேடிப் பிடித்துக் கொண்டு சென்றபோது அங்கு என்னுடன் இந்துக் கல்லூரியில் படித்த சாவகச்சேரியை சேர்ந்த பரந்தாமன் இருந்தார்.

## ஆஸ்திரேலியா

எனது வேலை பல்கலைக்கழகத்தில் 89 மார்கழியில் முடிந்துவிட்டது. வேலையற்று முதுமாணிப் பட்டதாரியாக நின்ற எனக்கு, சில கிழமைகளில், புத்தருக்குப்போல் ஒரே நாளில் வராது, ஞானம் படிப்படியாக வந்தது. நான் படித்த விஞ்ஞான மேல்படிப்பு நமக்கு அதிக தூரம் வராது. நான் நிழலாகத் தொடரவேண்டியது எனது மிருக வைத்திய துறையே. அதுவே எனக்கும் குடும்பத்திற்கும் சோறு போடும் என்பதே அந்த ஞானமாகும்.

மிருக வைத்தியத் தேர்வு இலகுவானதல்ல. இலங்கையில் படித்தது இங்கு காணாது. இலங்கையில் ஒரு சில நாட்கள் குதிரையைத் தடவியது மட்டுமே. மிகுதி புத்தகத்திலே. அங்கு தெருவில் நிற்கும் நாய்களுக்கு அதிக வியாதிகளில்லை. ஆனால், இங்கு படுக்கையறையில் வாழ்பவற்றிற்கும் மனிதர்கள்போல் பல நோய்களுண்டு.

அத்துடன் கலவரங்கள், அதில் உயிர் தப்ப ஓடியது, அதன்பின் வேலையற்ற காலங்கள் எனப் பல பிரச்சினைகளினால் பத்து வருடத்தில் மூளையில் இருந்த பல விடயங்கள் கரைந்து போய்விட்டன.

கால அவகாசமெடுத்து மிருக வைத்தியத்திற்கான செய்முறைப் பரீட்சைக்குப் படிக்கவேண்டும். அரசாங்கத்தின் உதவிப் பணத்தில் உயிர்வாழ முடியும். ஆனால், அதற்குமேல் வீட்டு வாடகை, குழந்தைகள் சம்பந்தமான செலவு எனப் பல இருக்கின்றன. இந்தச் செலவுகளும் குழந்தைகள் போல் எமக்கு முன்பாக வளர்ந்து கொண்டிருந்தன. நானும் மனைவியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தோம்.

இந்தக் காலத்தில் இலங்கையில் எனக்கு மிகவும் வேண்டிய ஒருவர். எல்லோராலும் 'TRRO கந்தசாமி' என அழைக்கப்படுபவர். தமிழகத்தில், இலங்கை அகதிகளுடன் நான் மருத்துவ பணிகளில் ஈடுபட்டபோது எனக்கு உதவியவர். பலகாலமாக ஈழ அகதிகள் விடயங்களில் தனது வாழ்வை அர்ப்பணித்தவர். இங்கிலாந்தில் வசதியாக வாழ்ந்த சட்டத்தரணி அவர். இலங்கை - இந்திய உடன்படிக்கையின் பின்பாக மக்களுக்கு உதவி செய்வதற்காகத்தனதும் நண்பர்களினதும் பணத்துடன் யாழ்ப்பாணம் வந்தவரை அக்காலப் பகுதியில் இனம்

தெரியாத சிலர் கொலை செய்துவிட்டனர்.

அவரைக் கொன்றது 'ஈரோஸ்' என்ற இயக்கமென பின்னர்தான் அறிந்தோம். அவரது கொலை எம்மை அதிரவைத்தது. 'TRRO' கந்தசாமி அவர்களது வாழ்வையும் சமூகப் பணிகளையும் நினைவுகூரும் அஞ்சலிக் கூட்டங்கள் மெல்பனிலும் சிட்னியிலும் நடைபெற்றன.

மெல்பன் கூட்டத்தில் பேசுவதற்காக நான் சிட்னியிலிருந்து அழைக்கப்பட்டிருந்தேன். பின்னர் சிட்னியில் தமிழ் மனித உரிமைகள் அமைப்பினாராலும் அக்கூட்டம் நடத்தப்பட்டது. அதில் கலந்துகொள்வதற்காக மெல்பனிலிருந்து நண்பர் எழுத்தாளர் முருகபூபதி வந்தார்.

அன்று எனது வீட்டுக்கு வந்த அவரே, எனது இரண்டு பிள்ளைகளையும் முதன்முதலாக மக்டொனால்ட்ஸ்க்கு கூட்டிச் சென்றவர். இந்தச் சம்பவத்தை நான் மறந்துவிட்டேன். ஆனால், எனது மனைவியின் மனதில் பலகாலமாக இருந்த சம்பவமிது. இதை இங்கு ஏன் சொல்கிறேன் என்றால் ஆண்கள் பல விடயங்களை இலகுவாக மறந்துவிடுவார்கள். பெண்கள் தங்களுக்கோ அல்லது தங்கள் குழந்தைகள் சார்ந்தோ நடந்த சிறு விடயங்களைகூட மறக்கமாட்டார்கள்.

இன்னுமொரு ஒரு சுவாரசியமான சம்பவத்தையும் சொல்லாது விடமுடியாது. இலங்கை - இந்திய ஒப்பந்தத்தால் உருவாகிய மாகாண சபையை நான் ஆதரித்ததால், இங்குள்ள விடுதலைப்புலிகள் ஆதரவாளர்கள் என்மீது ஆத்திரம் கொண்டார்கள். மற்ற நாடுகள் போல் ஆஸ்திரேலியாவில் வன்முறை செய்யமுடியாது. ஐரோப்பாவைப்போல் அல்லாது, ஆஸ்திரேலியா கடல் சூழ்ந்த கண்டமாகும். அதனால் எதனையும் செய்துவிட்டு மற்ற நாடுகளுக்குப் பாயமுடியாது.

என்மீது இவர்கள் புதிதான சித்திரவதை முறையை இங்கு கையாண்டார்கள். இரவு பன்னிரண்டு அல்லது ஒரு மணியளவில் எங்கள் வீட்டுக்குத் தொலைபேசி எடுத்து, ஒவ்வொரு நாளும் என்னைத் தூசண வார்த்தைகளால் திட்டுவார்கள். பின்னாளில் தொலைபேசியை நாங்கள் எடுக்காது விட்டாலும், அழைப்பு தொடர்ந்து வரும். இதனால் நடந்த முக்கிய நன்மை என்னவென்றால், முன்னிரவில் குழந்தைகளுடன் உறங்கிய எனது மனைவி, பன்னிரண்டு ஒரு மணிக்கு எழுந்து படிப்பார். இவர்களது இந்த தொலைபேசி (தொல்லைபேசி) சேவையே எனது மனைவியை மருத்துவத்துறையில் எழுத்து மூலமான பரீட்சையில் சித்தியடைய வைத்தது.

இப்படியாகச் சித்தியடைந்தவுடன் விக்ரோரிய மாநிலத்தின் தென்மேற்கே உள்ள வார்ணம்பூல் என்ற சிறிய நகரத்தின் வைத்தியசாலையிலிருந்து எனது மனைவிக்கு வேலைக்கு வருமாற அழைப்பு வந்தது.

சிட்னி வாழ் விடுதலைப்புலிகள் ஆதரவாளர்களுக்கு நன்றி கூறியபடி, அவர்களினது உதவியால் கிடைத்த வேலைக்காக இரண்டு வருட கால சிட்னியின் வாசத்தையும் அங்கு நான்கு வீடுகள் மாறி மாறி அலைந்த வாழ்வையும் துறந்து, எங்களது ஹோண்டா வாகனத்தில் வார்ணம்பூலை நோக்கிப் பயணமானோம்.

ஹோண்டா ஸ்ரேசன் வாகனத்தின் பின் பகுதியில் தொலைக்காட்சி பெட்டியையும், துணிமணி பெட்டிகளையும் அடைத்துகொண்டு வார்ணம்பூல் நோக்கி புறப்பட்டோம்.

கிட்டத்தட்ட 1100 கிலோமீட்டர்கள் பயணம் செய்யவேண்டும். அந்தக் காரில் வானொலி மட்டுமே உள்ளது. ஒலி நாடா போடமுடியாது. எனது சீட்டின் பின்பகுதியில் ஒரு ஒலிநாடா உள்ள வானொலியை வைத்து தமிழ்ப் பாடல்களைக் கேட்டபடி பிரயாணித்தோம்.

மெல்பனில் தங்கி ஓய்வெடுத்து, மேற்கு நோக்கி தொடர்ந்த பயணத்தில் நானே சாரதி. மனைவிக்கு அப்போது வாகனம் ஓட்டத் தெரியாது. இது முப்பது வருடத்திற்கு முன்பான நிலைமை. இப்பொழுது நான் வாகனம் ஓட்டும்போது எனது மனைவி, மகள், மகன் எல்லோரும் எனக்கு வாகனம் எவ்வாறு செலுத்தவேண்டும் எனக்கற்றுக் கொடுக்கிறார்கள்.

1990ஆம் ஆண்டு தைமாத இறுதியில், வெம்மையான கோடைக்காலம். சூரியன் ஓசோனது ஓட்டைக்குள் நுழைந்து நிலத்தை வறுத்தபடியிருந்தான். கண் திறந்து பார்க்கக் கூசும் அளவுக்கு வெளிச்சம். காருக்கு ஏர் கண்டிஷனும் இல்லை.

இப்படி வார்ணம்பூலுக்கு மாலையில் பயணித்தபோது நள்ளிரவுத் திருடனாக ஒரு நோய் வந்து பிடித்துக்கொண்டது. சிறு வயதில் என்னை வாட்டி எடுத்த ஆஸ்துமா எனக்கு பன்னிரண்டு வயதாகியதும் அற்றுப் போயிருந்தது. மீண்டும் இருபது வருடங்களின் பின்னர் வந்தது.

நல்ல வெய்யில் நாளில் ஆஸ்திரேலியாவில் வளரும் புற்கள் மற்றும் சிறிய தாவரங்களின் பூக்களின் மகரந்தங்கள் வெடித்துச் சிதறி, பெண்பூக்களைத் கருக்கட்டலுக்கு தேடும்போது, அந்த பருவகால மாற்றம் எமது மூக்கின் சுவாசக் குழாய்களில் மூக்கரிப்பையும் பின்பு மார்பில் ஆஸ்துமாவையும் உருவாக்குகின்றன.

வார்ணம்பூல் போகும் பாதையில், ஆஸ்திரேலியத் தென்கரையின் சமுத்திரத்தின் அலைகள் பாறைகளை செதுக்கிசிற்பங்களை உருவாக்கியிருக்கும் காட்சிகளைக் காணலாம். இங்குதான் பிரசித்தி பெற்ற பன்னிரண்டு சீடர்கள் என்ற கற்பாறைகள் உள்ளன. வீதியின் ஒரு பக்கம் பாறைகளில் மோதி இசையெழுப்பும் சமுத்திரம். மறுபக்கம் பச்சைப்பசேலன நறுமணம் வீசும் யூகலிப்ரஸ் காடு. அதனிடையே கொண்டை ஊசியாக வளைந்து ஏறி இறங்கும் பாதை. ரம்மியமாகத்தான் இருக்கும்.

ஆஸ்த்துமாவுடன் தும்மலும் இணையும். இருமியவாறு, காற்றை நுரையீரலுக்குள் இழுத்தபடி செல்பவனுக்கு இயற்கையின் சுந்தரத்தை எப்படி ஆராதிக்க முடியும்?

(தொடரும்)

நடேசன் <uthayam12@gmail.com>



# அம்ருதா அட்சரா பதிப்பக

## வெளியீடுகள் கிடைக்குமிடம்

| | | |
|---|---|---|
| **நியூ புக் லேண்ட்ஸ்**<br>வடக்கு உஸ்மான் ரோடு,<br>தி. நகர், சென்னை-600 017.<br>தொலைபேசி : 044 - 2815 6006 | **ரம்யா புக் வேல்ட்**<br>எண். 160, தலைமைத் தபால்<br>அலுவலகம், விழுப்புரம்.<br>கைபேசி : 94431 78915 | **A.K. சந்திரய்யன் & சன்ஸ்**<br>எண். 252/161B, செரி ரோடு,<br>சேலம்.<br>தொலைபேசி : 0427 2410096 |
| **திருமால் புக் ஷாப்**<br>எண்.17/A, பெங்களூர் சாலை,<br>கிருஷ்ணகிரி.<br>கைபேசி : 94436 31941 | **விஜயா பதிப்பகம்**<br>எண். 20, ராஜா தெரு,<br>கோவை - 641 001.<br>கைபேசி : 94438 50000<br>தொலைபேசி : 2394614 | **புக்ஸ் & புக்ஸ்**<br>எண். 29, நியூ ஸ்கீம் சாலை,<br>பொள்ளாச்சி - 624 001.<br>கைபேசி : 98650 05084. |
| **அருணை புக் சென்டர்**<br>திருவூடல் தெரு,<br>திருவண்ணாமலை - 606 601.<br>கைபேசி : 92453 32365 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண்.79-80, மேற்கு கோபுர வீதி,<br>மதுரை - 625 001.<br>தொலைபேசி : 0452-2344106 | **சர்வோதயா இலக்கியப் பண்ணை**<br>எண்.32/1, மேற்கு வெளி வீதி,<br>மதுரை-1.<br>கைபேசி : 98946 42007 |
| **குமுதம் புக் சென்டர்**<br>எண். 29, VOC பஸ் நிலையம்,<br>பழனி.<br>கைபேசி : 98428 43479 | **மகேஸ்வரி புத்தக நிலையம்**<br>எண். 29, கார்ப்பரேஷன் காம்ப்ளக்ஸ்,<br>ஜீவாபாய் மேல் நிலைப்பள்ளி அருகில்,<br>ரயில்வே ஸ்டேஷன் சாலை, திருப்பூர்.<br>கைபேசி : 94420 04254 | **பாண்டியன் புத்த அகம்**<br>எண். 793, வடக்கு மெயின் தெரு,<br>பிருந்தாவனம் கிழக்கு,<br>புதுக்கோட்டை - 622 001<br>கைபேசி : 99766 93072 |
| **பாவேந்தர் புக் ஸ்டால்**<br>எண். 1, கனகசபை நகர்,<br>நகராட்சி காலனி,<br>மருத்துவக் கல்லூரிச் சாலை,<br>தஞ்சாவூர்.<br>கைபேசி : 93600 18384 | **மார்க்கண்டேயன் புக் காலரி**<br>கும்பேஸ்வரர் சன்னதி,<br>கும்பகோணம் - 612 001.<br>கைபேசி : 96298 15580 | **இளங்கோ புக் சென்டர்**<br>எண். 51/5, நாராயணப் பிள்ளை தெரு,<br>மயிலாடுதுறை.<br>தொலைபேசி : 04364-226188 |
| **அறிவு புத்தக நிலையம்**<br>தெற்குத் தெரு, திருவாரூர்.<br>கைபேசி : 94431 25561 | **பாலா தினகரன் நியூஸ் ஏஜென்சி**<br>காரைக்கால்.<br>கைபேசி : 94431 20637 | **நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்**<br>எண். 4, பெரியார் பழைய<br>பஸ் நிலையம், திருநெல்வேலி.<br>கைபேசி : 98946 66890 |
| **ஈகிள் புக் சென்டர்**<br>எண். 1A/25, சிதம்பரம் மெயின் ரோடு,<br>பாளையங்கோட்டை ரோடு, தூத்துக்குடி.<br>கைபேசி : 94436 33333 | **சித்ரா தேவி கல்லூரி புக் சென்டர்**<br>எண். 280, மெயின் ரோடு,<br>கோவில்பட்டி - 628 501.<br>கைபேசி : 98943 25574 | **சுதர்சன் புக்ஸ்**<br>எண். 4, பெல் ஸ்டேஜ் டவுன்,<br>S.P. அலுவலகம் சாலை,<br>நாகர்கோவில் - 629 001.<br>தொலைபேசி : 04652-228445 |

**தொடர்புக்கு : 044-2435 3555 / 94440 70000**

**அம்ருதா** இதழ் தங்கள் பகுதியில் எங்கு கிடைக்கவில்லை என்பதை
தகவல் தெரிவித்து உதவுங்கள் : **96005 79149 / 97510 51526**

# அட்சரா வெளியீடுகள்

















































**அட்சரா பதிப்பகம்**
12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,